For private circulation only

Book Post

www.tchsportal.co.in

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60 · திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும் · ஆகஸ்ட் 2021 · இதழ் 15

## The Field is the World
## The World is my Parish




# கிறிஸ்துவின் பணியில் கிறிஸ்தவ மிஷன் இயக்கங்கள்

# ஆசிரியர் சுவடு

## கிறிஸ்துவுக்குள் அன்பான வரலாற்றுச் சுவடுகள் வாசகர்களே,

ஆண்டவரும், மீட்பருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே உங்கள் அனைவருக்கும் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் சார்பாக வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இம்மாத இதழானது "கிறிஸ்தவ மிஷன் இயக்கங்களின் பங்கு" என்ற கருப்பொருளின் அடிப்படையில் கட்டுரைகளும், ஆய்வுக்கட்டுரைகளும் கொடுக்கப்பட்டுள்ளது. சிறந்த கட்டுரை ஆசிரியர்களின் படைப்புகளை கொண்டு இவ்விதழ் அமைந்துள்ளது. இந்திய சபை வரலாற்றை நாம் உற்றுக் கவனிப்போமானால் தேவனால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு கருவியாக மிஷனரி ஸ்தாபனங்கள் செயல்பட்டுக் கொண்டு வருவதை நாம் புரிந்து கொள்ள முடியும். இந்தியத் திருச்சபையே இதற்கு ஒரு நல்ல உதாரணம். அப்போஸ்தலனாகிய தோமாவிற்குப் பிறகு பல இந்தியத் திருச்சபைகளை ஸ்தாபிக்க, வேத ஞானத்திலே வளர்க்க தேவன் பல மேலை நாட்டு மிஷனரி ஸ்தாபனங்களை உபயோகித்துள்ளார். அதன் பயனாளிகளாகிய நாம் அதை மறுக்க முடியாது. அந்த ஸ்தாபனங்கள் தங்கள் மிஷனரிகளைத் தாங்கி ஊக்குவித்ததின் விளைவாக. நாம் பல நன்மைகளைப் பெற்றுக் கொண்டோம்..

அரசுக் கல்விக்கூடங்கள் துவங்கப்படுவதற்கு வெகு காலத்திற்கு முன்பே பல கல்வி நிறுவனங்கள், மருத்துவ சேவைகளை மிஷனரிகள் வாயிலாகப் பெற்றுக்கொண்டோம்! விசேஷமாக பெண் கல்வி, சதி, மற்றும் தேவதாசி முறைமை போன்ற சமூக தீமைகளுக்கு முடிவைக் கண்டோம்! அதி முக்கியமாக இருளிலிருந்து சுவிசேஷ ஒளிக்குள் வந்தோம்! நம் தாய் மொழிகளில் வேதத்தைப் பெற்றுக் கொண்டோம்! மிஷன் இயக்கங்களின் பணிகளை குறித்து தகவல் களஞ்சியங்களை கொடுத்துள்ளோம். இன்னும் மிஷன் இயங்கங்கள் செய்த பணிகள் அநேகம் உண்டு மறைக்கப்பட்ட, மறைந்த, மறந்த வரலாற்றுப் பக்கங்களை கொண்டு வர தொடர்ந்து திட்டமிட்டுள்ளோம். வாசகர்கள் மற்றவர்களோடு கூட பகிர்ந்துக் கொண்டு, அடுத்த தலைமுறையினரின் கரங்களில் கொடுப்பது நம் கடமை.

எனவே வாசகர்கள் இந்நூலை நண்பர்கள், உறவினர்களுக்கு அறிமுகப்படுத்த அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன். ஒவ்வொரு மாதமும் இவ்விதழை வெளியிடுவதற்கு மிகுந்த பொருட்செலவுகள் உண்டு, மாத சந்தாவை புதுப்பித்து கொள்ளும்படி அன்புடன் நினைவுபடுத்துகிறேன். முடியுமானால் காணிக்கையாகவோ அல்லது நன்கொடையாகவோ கொடுத்து தாங்க அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

வரும் நாட்களில் வரலாற்று ஆய்வுகளை இன்னும் அதிகப்படுத்த திட்டங்கள் உண்டு. செப்டம்பர் மாதம் **'திருச்சபை வரலாற்றில் சுதேச இயக்கங்கள்'** என்ற கருப்பொருளின் கீழ் ஆய்வுகட்டுரைகள் வெளிவர இருக்கிறது. திருச்சபை வரலாற்றில் சுதேச இயக்கங்கள் பற்றிய வரலாற்றுப் பக்கங்களை குறித்த உங்கள் கட்டுரைகளை 25ம் தேதிக்குள் அனுப்புமாறு அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

மன்னா செல்வகுமார்


**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
**கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,**
**பங்களாச் சுரண்டை-627859,**
**தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)**
04633 290401

**பதிப்பாசிரியர் : மன்னா செல்வகுமார்**

**வடிவமைப்பு : சுஜித் ரெக்ஸ்**

**சந்தா விபரங்களுக்கு**
**91767 80001**

*WWW.*
**tchsportal.co.in**

**வரலாற்றுச் சுவடுகள்**
**மாத ஆய்விதழ் தொடர்பான ஆலோசனைகளை**
**இந்த மின்னஞ்சலில் அனுப்பலாம்**
**christianhistorical@gmail.com**






### தேவனுடைய மிஷனரித் திட்டத்தில்

# கிறிஸ்தவ மிஷனரி ஸ்தாபனங்களின் பங்கு

மத்தேயு 28: 18, 19, 20 நாம் வாசிக்கும் வசனங்கள் **'பிரதானக் கட்டளை'** என்று அழைக்கப்படுகிறது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கடைசிக் கட்டளையான இந்தப் பிரதானக் கட்டளையை, மிஷனரிப் பணிகளுக்கு ஆதாரமாக நாம் எடுத்துரைக்கிறோம். சற்று ஆழமாக ஆராய்ந்தால், இந்தப் பிரதானக் கட்டளை தேவனின் மிஷனரித் திட்டத்தின் தொடக்கம் அல்ல. ஆனால் அதன் தொடர்ச்சி.

வேதத்தின் முதற்புத்தகமான ஆதியாகமத்திலேயே தேவனின் மீட்பின் திட்டத்தையும் (ஆதி' 3: 15), அத்திட்டம் சகல மக்கள் கூட்டங்களைச் சென்றடைய வேண்டும் என்ற அவருடைய முன் ஆலோசனையையும் நாம் வாசிக்கிறோம். (ஆதி 12:1, 2, 3)

பழைய ஏற்பாட்டின் ஒவ்வொரு புத்தகமும் இத்திட்டத்தை நோக்கித் தான் நகர்கின்றன. உதாரணமாக, சங்கீதங்கள், ஏசாயா தீர்க்கதரிசியின் புத்தகம் இவைகளில் மக்கள் கூட்டங்கள் அவருடைய மகிமையைப் பிரஸ்தாபப்படுத்துவதைக் குறித்த கருத்து அடிக்கடி குறிப்பிடப்பட்டுள்ளது. பழைய ஏற்பாட்டின் கடைசிப் புத்தகம் வரை தேவன் சகல மக்கள் கூட்டங்களுக்கான தனது தரிசனத்தைக் குறிப்பிடுவதைக் காணலாம். (மல்கியா 1:11)

இதன் தொடர்ச்சியாகவே ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து மத்தேயு 28:19 இல் **'நீங்கள் புறப்பட்டு போய் சகல ஜாதிகளையும் சீஷராக்கி..'** என்ற பிரதானக் கட்டளையைக் கொடுக்கிறார்.

இந்தப் பிரதானக் கட்டளையின் சிறப்பு என்ன? தன்னுடைய மிஷனரித் திட்டத்தை செயல்படுத்த அவருடைய சீடர்களாகிய நம்மையும் அவரோடு இணைத்துக் கொள்வது தான்!! ஆகவே இதைச் செயல்படுத்துவது தான் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் சீடர்களின் இன்றியமையாதக் கடமை; இதுவே சபையின் தலையாயக் கடமை. அதைச் செயல்படுத்துவதற்கு தேவன் தன்னுடைய சபைக்காக ஒரு துணை அமைப்பை உருவாக்கி அதன் மூலமாகவும் தன்னுடையத் திட்டத்தை நிறைவேற்றி வருவதை ஆதித்திருச்சபை வரலாறு துவங்கி, இன்று வரை நாம் காண்கிறோம். இந்த அமைப்பு தான் மிஷனரி ஸ்தாபனங்கள். இந்தத் துணை அமைப்பின் முக்கியமான கூறு, மாற்றுக் கலாச்சார ஊழியம்; மாற்று மொழியில் சுவிசேஷ பிரகடனம்.

உலகத்திலேயே முதன்முதலாகத் துவங்கப்பட்ட மிஷனரி ஸ்தாபனத்தைக் குறித்து அப்போஸ்தலருடைய நடபடிகள் 13:1, 2, 3, இல் நாம் வாசிக்கிறோம். பரிசுத்த ஆவியானவர் அந்தியோகியா சபையிலிருந்து பவுலையும் பர்னபாவையும் அனுப்புவதையும், அவர்கள் தனியாக ஒரு சிறிய மிஷனரி இயக்கமாகச் செயல்படுவதையும், தங்களோடு புதிய மிஷனரிகளான மாற்கு, தீமோத்தேயு, தீத்து முதலானவர்களை இணைத்துக் கொண்டு தேவனின் மிஷனரித் திட்டத்தை செயல்படுத்தியதையும் அப்போஸ்தலருடைய நடபடிகளின் மற்ற அத்தியாயங்களில் நாம் வாசிக்கிறோம்.. இது மிஷனரி ஸ்தாபனங்களின் வேத அடிப்படையையும் முக்கியத்தையும் விளக்குகிறது. அந்தியோகியா சபை பவுலும் பர்னபாவையும் அனுப்பியது; ஆனால் பவுலும் பர்னபாவும் அவர்களுடைய சக ஊழியர்களும் மாற்றுக் கலாச்சார சூழ்நிலையில் நிறைவேற்றிய பணிக்கள ஊழியங்களை அந்தியோகியா சபை நேரடியாக நிறைவேற்றியிருக்க முடியாது. ஆக, தேவனுடைய மிஷனரித் திட்டத்தில் உள்ளூர் சபைக்கு ஒரு வேலை; மிஷனரி ஸ்தாபனங்களுக்கு ஒரு வேலை என்பதை நாம் பார்க்கிறோம்! ஆதலால் தான் மிஷனரி ஸ்தாபனங்களை ஆங்கிலத்தில் 'Parachurch Organizations' என்று அழைக்கிறார்கள். அதற்கு அர்த்தம் - சபைகளோடு துணை நின்று, அச்சபைகள் நேரடியாக நிறைவேற்ற முடியாத, ஊழியங்களில் ஈடுபடும் ஸ்தாபனங்கள்.

உலக சபை வரலாற்றையும், இந்திய சபை வரலாற்றையும் நாம் உற்றுக் கவனிப்போமானால் தேவனால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு கருவியாக மிஷனரி ஸ்தாபனங்கள் செயல் பட்டுக் கொண்டு

வருவதை நாம் புரிந்து கொள்ள முடியும். இந்தியத் திருச்சபையே இதற்கு ஒரு நல்ல உதாரணம். அப்போஸ்தலனாகிய தோமாவிற்குப் பிறகு பல இந்தியத் திருச்சபைகளை ஸ்தாபிக்க, வேத ஞானத்திலே வளர்க்க தேவன் பல மேலை நாட்டு மிஷனரி ஸ்தாபனங்களை உபயோகித்துள்ளார். அதன் பயனாளிகளாகிய நாம் அதை மறுக்க முடியாது. அந்த ஸ்தாபனங்கள் தங்கள் மிஷனரிகளைத் தாங்கி ஊக்குவித்ததின் விளைவாக. நாம் பல நன்மைகளைப் பெற்றுக் கொண்டோம்..

நமது தேசத்தின் பலமொழிகளில் இலக்கணம் மற்றும் அகராதிகள் கிடைக்கப் பெற்று, நமது மொழிகள் உலக மேடையில் உலாவரக் கண்டோம்!

அரசுக் கல்விக்கூடங்கள் துவங்கப்படுவதற்கு வெகு காலத்திற்கு முன்பே பல பள்ளிகள் கல்லூரிகள் மருத்துவமனைகளை, மிஷனரிகள் வாயிலாகப் பெற்றுக்கொண்டோம்! விசேஷமாக பெண்கல்வி, சதி, மற்றும் தேவதாசி முறைமை போன்ற சமூக தீமைகளுக்கு முடிவைக் கண்டோம்! அதி முக்கியமாக இருளிலிருந்து சுவிசேஷ ஒளிக்குள் வந்தோம்! நம் தாய் மொழிகளில் வேதத்தைப் பெற்றுக் கொண்டோம்!

இன்று நமது இந்திய சகோதர சகோதரிகளை நாமே சுவிசேஷத்தினால் சந்திக்கும் படிக்கு நம் நாட்டிலிருந்தே மிஷனரி, ஸ்தாபனங்கள் எழும்ப தேவன் கிருபை பாராட்டியுள்ளார். பயனாளிகளாக மட்டும் இருந்து வந்த நாம் நம் மத்தியில் இன்று கிட்டத்தட்ட 279 மிஷனரி ஸ்தாபனங்களைக் காண உதவி செய்துள்ளார்!

- மிஷனரி ஸ்தாபனங்களைத் தேவன் எழுப்பியிராவிட்டால், மாற்றுக் கலாச்சார ஊழியங்கள் முழு நேரமாக, பணிக்களங்களில் இத்தனை பெருகியிருக்க முடியாது. அதற்கே உரிய சவால்களை அநேகம்!!
- நமது நாட்டில் எந்தெந்த மக்கள் கூட்டங்கள் மத்தியில் சுவிசேஷம் செல்லவில்லை என்பதைக் குறித்து கணக்கெடுப்பு செய்வது
- அந்த மக்கள் கூட்டங்கள் அவர்கள் இருக்கும் மாநிலங்கள், அவர்களுடைய ஜனத்தொகை, அவர்கள் மொழி மற்றும் கலாச்சாரம் ஆகியவைக் குறித்த விவரங்கள் சேகரிப்பது
- அந்த விவரங்களை, சபையிடம் கொண்டு செல்வது
- அந்த விவரங்களைக் கேட்டு மிஷனரித் தாகத்துடன் வருபவர்களை மிஷனரிப் பணியில் அமர்த்துவது
- அவர்களுக்கான பணித்தளத்தை தேர்ந்தெடுத்துக் கொடுப்பது
- அவர்களுக்கு மொழி மற்றும் மாற்றுக் கலாச்சரத்தைக் கற்றுக்கொள்ளும் பயிற்சிகளைக் கொடுப்பது
- மிஷனரிகளின் ஆவிக்குரிய, மருத்துவ, பொருளாதார மற்றும் பிள்ளைகளின் படிப்பு தேவைகளைச் சந்திப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்வது
- அவர்களுடைய பணிக்கள நிலையைப் புரிந்து செயல்படும் நிர்வாகத்தை அமைத்துக் கொடுப்பது
- பணிக் களங்களில் சோர்வுறும் நேரங்களில் மிஷனரிகளுக்கு ஆலோசனைகளைச் சொல்லி அவர்களை உற்சாகப்படுத்தும் முறைகளைத் திட்டமிட்டு செயல்படுத்துவது
- அவர்களுக்காகக் கரிசனையோடு ஜெபிக்கும் குழுக்களை எற்படுத்துவது
- சுவிசேஷத்தினிமித்தம் உபத்திரவங்கள் வரும் போது அவர்களுக்கு ஆதரவாக நிற்பது
- மிஷனரிகளுக்காக மட்டுமல்ல, அவர்களால் சந்திக்கப்படும் விசுவாசிகளின் ஆவிக்குரிய மற்றும் சமூக வளர்ச்சிக்கு உறுதுணையாக நிற்பது
- மிஷனரிகள் பணிக்கள விசுவாசிகள் மற்றும் உள்ளூர் சபைகளுக்கிடையில் பாலமாக செயல்படுவது

மேற்கூறப்பட்ட சிறப்புப் பணிகளில் முழு நேரமாக கவனம் செலுத்தினால் தான் தேவனுடைய மிஷனரித் திட்டம் நிறைவேறும். ஏனென்றால் இது பகுதி நேர பணியால் மட்டும் முடியாது. முழு நேரப்பணியாகவும் செயல் படுத்தியாக வேண்டும்.

இவ்வனைத்துப் பணிகளிலும் உள்ளூர் சபைகள் நேரடியாக முழு நேரமாக, சிறப்பாக மாற்றுக் கலாசார சூழ்நிலையில் ஈடுபடுவதில் வரம்புகள் உள்ளன என்பதால் தேவன் பல மிஷனரி ஸ்தாபனங்களை எழுப்பியுள்ளார்.

சிறிதும் பெரிதுமான பல மிஷனரி ஸ்தாபனங்கள் மேற்கூறப்பட்ட சிறப்புப் பணிகளை செய்யாவிட்டால், மேலை நாட்டு மிஷனரிகள் இல்லாத பொழுதும் பரந்து விரிந்த நம் பாரத தேசத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் இன்றளவும் சுவிசேஷம் சென்று கொண்டேயிருக்காது! எழுத்து வடிவமே இல்லாமலிருந்த பல மொழிகளில் இன்று வேதாகமம் மொழிபெயர்க்கப்பட்டிருக்காது! நாம் பெயர் அறிந்திராத பல மக்கள் கூட்டங்கள் இன்று தங்கள் சொந்த மொழிகளில் எல்லா நாமத்திற்கும் மேலான நாமத்தைத் துதித்துக் கொண்டிருக்கமாட்டார்கள்! அது மட்டுமல்ல பல மக்கள் கூட்டங்களுடைய பெயர்கள் இன்று உள்ளூர் சபைகளின் ஜெபத்தில் உச்சரிக்கப்பட்டிருக்காது!

பல மிஷனரிப் பத்திரிக்கைகள் கிறிஸ்தவ இலக்கியத்தை மெருகேற்றியிருக்காது!

தன்னுடைய மிஷனரித் திட்டத்தை நிறைவேற்ற நம் நாட்டில் தேவன் எழுப்பியிருக்கும் மிஷனரி ஸ்தாபனங்களுக்காக, அவரால் அங்கீகரிக்கப்பட்ட இந்த 'சபைத்துணை' அமைப்புகளுக்காக நாம் எவ்வளவு நன்றியுள்ளவர்களாக இருக்க வேண்டும்'! இந்த ஸ்தாபனங்களை உருவாக்கிய, தேவ மனிதர்களுக்காய் எவ்வளவாய் தேவனைத் துதிக்க வேண்டும்! வெளிப்படுத்தின விசேஷம் 7:9 இல் நாம் வாசிக்கும் விதமாக அவரது திட்டம் நிறைவேறும் வரை மிஷனரி ஸ்தாபனங்களுக்கு எவ்வளவாய் நமது ஆதரவை நல்கிட வேண்டும்!

ஸ்தாபனங்களை நிர்வகிக்கும் மிஷனரிமாருக்காக, பணிக்கள மிஷனரிமாருக்காக, பணிக்கள முன்னேற்றப் பணியில் ஈடுபட்டிருக்கும் மிஷனரிமாருக்காக, எவ்வளவாய் நாம் ஜெபித்திட வேண்டும்!

**திருமதி. ஓமனா சௌந்தரராஜ்**
**பாண்டிச்சேரி**

# விதைப்போரும் விளை நிலமும்

## (1542 - 1799)



**புகழ்மிகு நிலம் :**

உலகில் கிறித்தவ நற்செய்திப் பணியினை ஆற்றிவரும் பல இடங்களில் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது திருநெல்வேலி. ஏனெனில் நற்செய்தியாகிய விதையினை விதைப்பதற்கும், அப்பணியினை ஆற்றி வரும் பணியாளர்கள் நற்பயனைப் பெறுவதற்கும் ஏற்ற இடமாக அது உள்ளது. 1857 ஆம் ஆண்டில் இதைக் குறித்து ஆராய்ந்து பார்த்த டாக்டர் கால்டுவெல் மிக்க மகிழ்ச்சியுடன் "இந்தியாவின் மிகப் பெரிதும் வளம் பெற்றதும், முன்னேறக் கூடியதுமான கிறித்தவ சமுதாயத்தை இங்கு கண்டதால் இதயமும் கண்களும் மகிழ்வெய்தின" எனக் குறிப்பிட்டுள்ளார் 1821 இல் பேராயர் ஹீபர் - 'தஞ்சை நெல்லை கிறித்தவ ஸ்தாபனங்களே இந்தியாவில் கிறித்தவத்திற்கும் பலமும் தூண்டுகோலுமாக விளங்கின' எனக் கூறியுள்ளார். 20 ஆண்டுகளுக்குப் பின் நெல்லைக்கு வருகை தந்த பேராயர் ஸ்பென்சர், திருநெல்வேலியின் வளமார்ந்த, ஏற்றம் மிக்க நிலையினை எழுதியதோடு 'இங்கிலாந்து இயேசு கிறிஸ்துவின் நற்செய்திக்கு எவ்வளவு முக்கியத்துவத்தை கொடுக்கின்றதோ, அவ்வளவு முக்கியத்துவத்தை நெல்லையும் கொடுக்கிறது' என்று துணிந்து ஆணித்தரமாகக் கூறியுள்ளார்.

தேவ ஊழியர் பலரால் சொல் மாலை சூட்டப்பெற்றபடி நெல்லை திருச்சபை வளர்ச்சியானது கிறித்தவத்தைத் தழுவிய நாடுகளெங்கும் பரவியது. நற்செய்திப் பணியாளர்களின் முயற்சியினை ஏற்றுக் கொள்ளக் கூடியதாக நெல் நிலம் இருந்ததால், அவ்வூழியத்திற்கெனத் தம்மைத் தத்தம் செய்துள்ள தேவ ஊழியர்கள் முறையாக் வருகை தந்து நற்செய்தியாகிய விதையினை விதைத்து புதிதாகத் தொடங்கிய சபையினைப் பராமரித்ததோடு, அப்பகுதியில் உள்ள மூப்பர்களைச் சீராகப் பயிற்றுவித்து, முழுப் பொறுப்பையும் ஏற்று நடத்தும் வண்ணம் அவர்களைத் தேர்ச்சி அடையச் செய்தனர். எல்லாவற்றுக்கும் மேலாக கடவுளின் அளவற்ற அருளால் இச்சபை, திருமண்டிலமாக மலர்ந்து 125 (1896-2021) ஆண்டுகள் ஆயின மிக எளிமையான, அற்புதமான திருச்சபையின் ஆரம்பத்தைக் கொண்ட தென்னிந்தியத் திருச்சபையின் அங்கமான திருநெல்வேலித் திருமண்டிலம், தற்போது தனது இருநூறு நாற்பத்தி ஒன்றாம் ஆண்டு நிறைவு விழாவினைக் கொண்டாட இருக்கின்றது.

> "இந்தியாவின் மிகப் பெரிதும் வளம் பெற்றதும், முன்னேறக் கூடியதுமான கிறித்தவ சமுதாயத்தை இங்கு கண்டதால் இதயமும் கண்களும் மகிழ்வெய்தின"
>
> டாக்டர் கால்டுவெல்



**பலவித விதைப்போர் : உரோமர்**

இந்தியத் துணைக்கண்டத்தின் தென் கோடிக்கருகில் தமிழ் நாட்டின் தென்கிழக்கிலுள்ள திருநெல்வேலி மாவட்டத்தில் புவி இயல் அமைப்போடு இன்றைய திருநெல்வேலித் திருமண்டிலம் இணைந்து காணப்படுகிறது. வாணிபத்தின் பொருட்டு வந்த மேற்கத்திய ஆதிக்கத்தினரால் கிறித்தவ மதம் நெல்லை மாவட்டத்திலும் அறிவிக்கப்பட்டது. 1498 ஆம் ஆண்டு வாஸ்கோடகாமா கள்ளிக்கோட்டையை வந்து சேர்ந்தார். இதற்குச் சிறிது காலத்திற்கு முன்னமேயே போர்த்துக்கீசியர். மேற்குப்பகுதியில் கோவா, கொச்சியையும், கிழக்கே தூத்துக்குடி, மைலாப்பூரையும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தனர். இருப்பினும், அவர்களுக்கு இந்திய மக்களுக்கு நற்செய்தியினைக் கூற விருப்பமில்லாதிருந்தது. இதனால் 1542 ஆம் ஆண்டு பிரான்சிஸ் சேவியர் என்னும் சிறப்பு வாய்ந்த நற்செய்திப் பணியாளர் கோவாவிற்கு வரும் வரை காத்திருக்க வேண்டியதாயிற்று. அவர், நற்செய்திப் பணியாளரான தனக்கு எல்லா உதவியும், ஆதரவும் அளிக்கப்பட வேண்டும் என்று போர்த்துக்கீசிய மன்னர் ஜான் இடமிருந்து, போர்த்துக்கீசிய அரசப் பிரதிநிதியான அல்புகர்க் என்பவருக்கு எழுதப்பட்ட ஒரு கடிதத்துடன் வந்திருந்தார். மேலும் போப் ஆண்டவரின் பிரதிநிதியாக இவர் இந்தியாவுக்கும், தூரக்கிழக்கு நாடுகளுக்கும் நியமிக்கப்பட்டிருந்தார். ஆனால் இவர் தனக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரத்தின்படி பணியாற்றாது, மக்களின் உள்ளத்தை அசைக்கும் வண்ணம் சுயமாகப் பணியாற்றினார். அன்னார், இந்தியாவில்

> 'தஞ்சை நெல்லை கிறித்தவ ஸ்தாபனங்களே இந்தியாவில் கிறித்தவத்திற்கும் பலமும் தூண்டுகோலுமாக விளங்கின'
>
> பேராயர் ஹீபர்

மிகக் குறுகிய காலமாகிய நான்கு ஆண்டுகளே பணிபுரிந்தார். அதன்பின் இதைவிடப் பெரிய இறையியல் பிரச்சாரப் பொறுப்பினை ஜப்பானில் மேற்கொள்ள நேர்ந்தது. கடல் கொள்ளைக்காரர்களால் உண்டாகும் சேதங்களினின்று காக்கப்பட்டு, போர்த்துக்கீசிய ஆதரவுக்கும், பராமரிப்புக்கும் உட்பட்ட நெல்லை மாவட்டக் கடற்கரையோரப் பகுதிகளில் பெயரளவுக்கு கிறித்தவர்களாக வாழ்ந்த 20,000 பரதவர்களுக்கு கிறித்தவ நம்பிக்கையையும் அடிப்படைத் தத்துவங்களையும் 1542 முதல் 1544 வரை எடுத்துக் கூறினார். 1600 முதல் (ஜெஸீயிட் குழு) இயேசு சபையினைச் சார்ந்த மதுரை ஸ்தாபனத்தாரால் நெல்லையின் உட்பகுதிளான கயத்தாறு காமநாயக்கன்பட்டி, வடக்கன்குளம் போன்ற இடங்களில் சபைகள் நிறுவப்பட்டன. இவர்களுள் முக்கியமானவர்களாகிய ராபர்ட் நொபிலி ஜான் டி பிரிட்டோ, ஜோசப் பெஸ்கி முதலியோர் இந்தியர்களோடு ஒன்று பட்டு வாழ்ந்து, தமிழ்மொழியில் பாண்டித்தியம் பெற்று உயர் சாதி இந்துக்கள் பலரைக் கிறித்தவராக்கினர். இதற்கு ஊழியம் ரோம் நகரில் அங்கீகரிக்கப்படாததோடு. 1775 இல் போப் கிளெமெந்துவின் காலத்தில் இயேசு சபை நசுக்கப்பட்டது

**டச்சுக்காரர் (உலாந்தியர்)**

கத்தோலிக்க முன்னோடிகள் வந்து ஒன்றரை நூற்றாண்டுகளான பின் ஏறத்தாழ 18 ஆம் நூற்றாண்டு வரை புரோட்டெஸ்டான்டு ஊழியர் ஐரோப்பாவில் இருந்து இந்தியாவை அடையாமலிருந்தது வியப்பிற்குரியதே மதச்சீர்திருத்தம் ஏற்பட்ட பின் முதல் 105 ஆண்டுகள் வரை சபைகள் தத்தம் நிலையை உறுதிப்படுத்துவதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்த காரணத்தினால், தங்களைச் சுற்றியுள்ள பரந்த உலகில் தாம் ஆற்ற வேண்டிய பணிகளைக் குறித்துச் சிந்திக்க நேரமில்லாமற் போயிற்று. ஸ்பெயின், போர்த்துக்கீசு ஆகிய இரு நாடுகளும் கடலாதிக்கம் செலுத்தும் நாடுகளாயிருந்தபடியால் உரோம சபை அவர்களைப் பின்பற்றிச் சென்றது. பின்னர் சிறிது சிறிதாக அவர்கள் ஆதிக்கம் குறைய பிரான்சு, பிரிட்டன், ஹாலந்து, ஜெர்மனி, நார்வே போன்ற நாடுகள் கடலாதிக்கம் பெற்று விளங்கின.

1600 ஆம் ஆண்டில் ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனியும் 1602 ஆம் ஆண்டில் டச்சு கிழக்கிந்தியக் கம்பெனியும் நிறுவப்பட்டன இந்திய வியாபாரத்தினைக் கைப்பற்றுவதில் ஸ்பெயினும் போர்த்துக்கீசும் சொந்த தேசத்தில் சண்டையிட்டன. 1658 இல் டச்சுக்காரர், தூத்துக்குடியை போர்த்துக்கீசியரிடமிருந்து கைப்பற்றி, கத்தோலிக்க மதகுருக்களை நாடு கடத்தி அப்பகுதிகளை மாற்றி அமைத்தனர். அவர்களின் கண்மூடித்தனமான இச்செய்கைகள் அவர்களுக்குத் தோல்வியையே கொடுத்தது. தூத்துக்குடியிலுள்ள கோவில்களைப் பண்டகசாககளாக மாற்றி தங்களுடைய பெரிய கோவில்களைக் கட்டினர். தூத்துக்குடியில் இது இன்னும் புனித சின்னமாகக் காணப்படுகிறது. நெல்லை ஆலய வரலாற்றிலும் இடம் பெற்றுள்ளது. இதன் தலைவாயிலில் பின்னலான எழுத்துக்களில் V O C என்றும் M D C CL 1750 என்னும் ஆண்டும் பொறிக்கப்பட்டுள்ளன எனவே இதுவே நெல்லை மாவட்டத்தின் முதல் புரோட்டஸ்டான்ட் கிறித்தவ ஆலயம் ஆகும். அரசியல் ஏற்றத்தாழ்வுகளுக்கேற்ப 1-6-1825 இல் இவ்வாலயம் ஒரு பெயரும் இடப்படாதபடி நிபந்தனைக்குட்பட்டு டச்சுக்காரரிடமிருந்து ஆங்கிலேயர் வசமாயிற்று.

டச்சுக்காரர், திருநெல்வேலி சபைக்குச் செய்தது மிக அற்பமானது மிகக் குறைவான நபர்களே தூத்துக்குடியிலும், சுற்றியுள்ள இடங்களிலுமிருந்து திருமுழுக்குப் பெற்றிருந்தனர். இதற்கேற்ப டச்சு ஸ்தாபனத்தோடு அல்லது ஹாலந்து சீர்திருத்த சபையோடு தொடர்புடைய ஒரு குடும்பமாவது நெல்லையில் இருப்பதாகத் தெரியவில்லை.

**டென்மார்க்கு தேசத்தவர் (டேனியர்கள் )**

இவர்கள் தரங்கம்பாடியில் தமது டேனிஷ் ஸ்தாபனத்தை நிறுவியிருந்தனர். அங்கிருந்து தஞ்சை, திருச்சி, இராமநாதபுரம் ஆகிய இடங்களுக்கும் அவர்கள் சபை பரவிற்று. மற்ற ஐரோப்பியர் போல டேனியர்களும் வியாபாரத்திற்காக இந்தியா வந்து தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள தரங்கம்பாடியில் சிறிய வாணிப ஸ்தலத்தை ஆரம்பித்தனர். அது 1621 இல் தஞ்சை மன்னரால் வழங்கப்பட்டது. பக்தியுள்ள நான்காம் பிரெடிரிக் 1705-இல் டேனிஷ் சபையினை ஆரம்பித்தார். அதன் முதல் இரு (மிஷனெரிகளாக) நற்செய்தித் தூதுவராக வந்தவர் பார்த்தலோமேயு சீகன்பால்கு, ஹென்றி புளுட்சோ என்னும் ஜெர்மானியராவர். அவர்கள் 1706ஆம் ஆண்டு ஜுலை 9ஆம் நாள் தரங்கம்பாடி வந்து சேர்ந்தனர். ஏழு ஆண்டுகளுக்குள் தரநகம்பாடியில் ஒரு பாடசாலையை நிறுவியதோடு தாமும் தமிழைக் கற்று புதிய ஏற்பாட்டினை மொழிபெயர்த்து விட்டனர். அப்போஸ்தலர் நடபடிகளோடு ஒத்துக் காணப்பட்ட அவர்கள் பத்திரிகைகள், இங்கிலாந்தில் பெரும் கிளர்ச்சியை ஏற்படுத்தியது சீகன்பால்குக்குக்குப் பின் ஊக்கமும் எழுச்சியும் பெற்ற இளைஞர்கள் பலர் தரங்கம்பாடியில் தாம் செய்யக் கூடியது மிகக் குறைவான ஊழியமே என்று அறிந்ததால், தம்முடைய எல்லைக்கு அப்பாற்பட்ட இடங்களுக்கும் செல்லத் தலைப்பட்டனர் ஆனால், டென்மார்க்கு அரசர் அதற்கான பண உதவி செய்ய மறுத்தார். ஆகவே, கிறித்தவ அறிவைப் பரப்பும் ஆங்கலிக்கன் சபை இவர்களின் புதிய இம்முயற்சிக்கு உதவ முன் வந்தது ஏனெனில் இச்சபை இவர்கள் முயற்சியை மிக உன்னிப்பாகக் கவனித்து வந்தது. இதனால் முன்னதாகவே அச்சு இயந்திரத்தைக் கப்பலில் அனுப்பியிருந்ததால் சீகன் பால்கு மொழிபெயர்த்த புதிய ஏற்பாட்டைத் தமிழில் அச்சிட்டிருந்தனர். ஏற்ற காலத்தில் கிடைத்த இந்த உதவியானது கொரிக், பெப்ரிஷியஸ், போல் போன்ற பல ஊழியர்கள் கடலூர் நாகப்பட்டினம், தஞ்சாவூர், சென்னை, திருச்சி முதலிய பல இடங்களுக்கும் சென்று சபைகளை நிறுவுவதற்கு உதவியாக இருந்தது.

கிறிஸ்தியான் பிரெடரிக் ஸ்வார்ட்ஸ் என்பவர் இவர்கள் எல்லாரிலும் மிகச்சிறந்தவரும், திருநெல்வேலி சபையை நிறுவியவருமானவர் இவர் 1750 இல் இந்தியாவிற்கு வந்து தான் மரிக்கும் வரை அதாவது 1798 வரை ஒரு முறை கூட ஐரோப்பாவிற்குத் திரும்பிச் செல்லாது அரிய சேவை செய்து மரித்தார். அவருடைய குணாதிசயங்களும், அரிய சாதனைகளும் 'மிஷனெரி' என்ற சொல்லுக்குப் புதிய மெருகூட்டுவதாய் அமைந்தது. **"என்னிடம் ஒரு கிறிஸ்தவனை அனுப்புங்கள் அவன் ஒருபோதும் என்னைக் கைவிட மாட்டான்"** என்று அவரைப் பற்றிக் கூறிய ஹைதர் அலியின் அவையில் இங்கிலாந்து மன்னரின் அரச தூதுவராகப் பணியாற்றியவர். சரபோஜி என்ற தஞ்சை இளவரசனது மெய்க்காவலனாகவும், பின் அவரது திவானாகவும்

பொறுப்பேற்றிருந்தார். தென்னிந்தியா முழுவதும் பரவியிருந்த அவரது இறைப்பணி வியக்கத் தக்கதாகும்

தரங்கம்பாடியில் சிறிது கால ஆரம்ப ஊழியத்துக்குப் பின் ஸ்வார்ட்சு அவர்கள் திருச்சி சென்று அங்கிருந்தே தரங்கபாடியின் உபதேசிமார்களின் ஊழியங்களை மேற்பார்வையிட்டதுடன் சுற்றியுள்ள பல இடங்களுக்கும் சென்று அவர்கள் செய்த பணியினைக் கண்டார். 1770 ஆம் ஆண்டிற்குள் திருச்சியில் குறிப்பிடத்தக்க அளவு கிறித்தவ அங்கத்தினர்கள் சேர்ந்ததுடன், கிழக்கிந்திய கம்பெனியில் பணி புரிந்த கிறித்தவ சிப்பாய்கள் திருநெல்வேலி வரை வந்து பணிபுரியவும் அடிகோலினார் மேலும் திருச்சிக்கு வணிக சம்பந்தமாக வரும் அநேகர் மனம் மாறி கிறித்தவர்களாகத் தம் ஊருக்குத் திரும்பிச் செல்வதும் உண்டு. இத்தகைய தனி நபர்களின் மாறுதலினாலேயே திருநெல்வேலிச் சபை ஆரம்பமாயிற்று எனலாம். திருச்சி ஆலய திருமுழுக்குப் பெயரேட்டில் 1770 ஆம் ஆண்டு ஆகஸ்டு 10 ஆம் நாள் திருநெல்வேலியைச் சேர்ந்த இலட்சுமணன் என்ற 20 வயது வாலிபன் ஞானப்பிரகாசம் ஆனார் என்ற சுவையான செய்தி காணப்படுகிறது.

**வெஸ்டர்ன் பேராயர்**

சுவார்ட்சு ஐயர் அவர்களின் 1771 ஆம் ஆண்டின் இதழ்களில் (Journals) முதன் முதலாகத் திருநெல்வேலி பற்றிய குறிப்பு காணப்படுகிறது திருச்சியிலிருந்து 200 மைல்களுக்கு அப்பாலுள்ள ஒரு கோட்டையும், திருநெல்வேலியின் முக்கியப் பட்டணங்களுள் ஒன்றுமான பாளையங்கோட்டை என்னுமிடத்தில் நமது சபையின் ஒரு கிறித்தவ அங்கத்தினர் வாழ்கின்றார் சவரிமுத்து என்பது அவர் பெயர். கிறித்தவ நம்பிக்கை பற்றி நன்கு அறிவுறுத்தப்பட்டு வேதத்தைக் கவனமாகப் படிப்பவர்... 'ஆங்கிலேயத் தளபதி ஒருவரின் மனைவி இத்தகைய பணியினைத் தொடர்ந்து செய்கின்றார்' என்று ஸ்வார்ட்சு ஐயர் அவர்கள் குறிப்பிடுகின்றார். சிதறிய ஒரு சிலரின் முயற்சியாலேயே திருநெல்வேலித் திருச்சபை உருவாக்கப்பட்டது.

1778 ஆம் ஆண்டு பெப்ருவரி மாதம் ஸ்வார்ட்சு ஐயர் பாளையங்கோட்டையின் சிறிய கிறித்தவ சமுதாயத்தைப் பார்வையிடவும், ஆங்கிலேயர் ஒருவரின் திருமணத்தை நடத்தவும், பல குழந்தைகளைத் திருமுழுக்காட்டவும் முதன் முதலாகப் பாளையங்கோட்டை வந்தார். அந்த வேளையில் தான் குளோரிந்தா என்னும் இளம் அந்தணப் பெண் திருமுழுக்குப் பெற விரும்பினாள் அவள் ஸ்வார்ட்சு ஐயருக்கு அறிமுகமானவளே எப்படியெனில் லிட்டில்டன் என்னும் ஆங்கிலேயப் படை அதிகாரி ஒருவரோடு தொடர்பு கொண்டு கிறிஸ்துவை அறிந்த குளோரிந்தா, ஸ்வார்ட்சு ஐயர் தஞ்சை வந்தபோது திருமுழுக்குப் பெற விரும்பியும், அவரால் மறுக்கப்பட்டவள். அந்த ஆங்கிலத் தளபதி சூலை நோயினால் பாதிக்கப்பட்டு இறந்துவிட்டான். நோயுற்ற காலத்தில் உண்மையாகத் தன்னைப் பராமரித்துப் பேணின கிளாரிந்தாவுக்குத் தன் சொத்துக்களை அவன் விட்டுச் சென்றான்.

வளர்ந்து வரும் திருச்சபைக்கு இன்றியமையாதவளாகவும் பெருமதிப்புக்கு உரியவளாகவும் குளோரிந்தா விளங்கியதை ஸ்வார்ட்சு ஐயர் பிறர் வாயினால் அறிந்தார். மேலும் பிற சமயத்தவரையும் கிறிஸ்துவின் மந்தைக்குள் இழுத்துக் கொள்ளும் தன்மை பொருந்தியவளாயும் இருந்தபடியால் வருங்காலத்தில் திருநெல்வேலித் திருச்சபையின் தாயாக அமையும் குளோரிந்தாவுக்கு 3 - 3- 1778 இல் திருமுழுக்குக் கொடுத்தார்.

இதன் பின் கிளாரிந்தா பல மடங்கு உற்சாகத்துடன் நற்செய்தியைப் பரப்பலானாள். அவளுடைய வீடு பிற சமயப் பெண்கள் பலரும் வந்து குழுமி நற்செய்தியைக் கேட்டு அறியும் இடமாயிற்று. 1779 ஆம் ஆண்டின் முற்பகுதியில் திருநெல்வேலிக்கு வருகை தந்த தரங்கம்பாடி நற்செய்தியாளர்களும், அங்குள்ள இந்தியப் போதகர் பிலிப்பு என்பவரும் நெல்லையில் காணப்பட்ட மத எழுச்சிக்குக் காரணமாக அமைந்தவள் குளோரிந்தா என்பதை அறிவித்தனர். ஸ்வார்ட்சு ஐயர் அவர்களின் உதவியாளராக நியமிக்கப் பெற்ற போல் ஐயர் 1779 ஆம் ஆண்டு ஜுன் மாதம் பாளையம்கோட்டைக்கு வந்த போது பாளையங்கோட்டையிலும் அதன் சுற்றுப்புறங்களிலுமுள்ள கிறித்தவ சமுதாயத்திற்கு குளோரிந்தா வகித்த பொறுப்பு தன் உள்ளத்தைக் கவர்ந்தது எனக் கூறுகிறார். 1799 ஆம் ஆண்டு ஜுன் 29 ஆம் நாள் குளோரிந்தாவின் 30 வயதான வேலையாள் ஒருவனுக்கு யோவான் என்று திருமுழுக்குக் கொடுத்ததோடு, அவளுடைய வளர்ப்பு மகளான மரியமாளுக்கும், அவனுக்கும் திருமணம் நடத்தி வைத்தார். இது வரை போதுமான திருமுழுக்குகள் நடைபெற்றதாலும், அன்று நடந்த திருமணத்தாலும் திருநெல்வேலித் திருச்சபை அன்று உருவாயிற்று என்று குறிப்பிடலாம்.

வரலாற்றுப் பக்கங்களின் இருந்து ..



## தமிழ் நாட்டின் வளர்ச்சிக்கு

# கிறிஸ்தவ மிஷனெரிகளின் பங்களிப்பு

**- இந்தியாவின் முன்னேற்றத்திற்கான ஒரு அடித்தளம்**



நம் தேசத்தின் வரலாறு மிகப் பழைமையானது என்றாலும், சமுதாயத்தின் பெரும்பாலான மக்கள் அறியாமை இருளிலேயே வாழ நிர்ப்பந்திக்கப்பட்டனர். கல்வி மற்றும் பல சமுதாய உரிமைகள் ஒரு சிலரின் ஏக போக உரிமையாக இருந்ததுடன் மற்றவர்கள் அதைப் பெறும் உரிமை அற்றவர்கள் என்று கருதப்பட்டது. நற்செய்தி அறிவிப்புப் பணிக்காக வந்த மிஷனெரிகள் சமுதாய மற்றும் நாட்டின் முன்னேற்றத்திற்கு தங்களால் இயன்றதைச் செய்து ஜனங்கள் தங்கள் வாழ்வில் வெளிச்சம் காண வழி செய்தனர். கிறிஸ்தவ மிஷனெரிகளைப் பற்றிய தவறான பிம்பத்தை உருவாக்கவும், அவர்களின் பங்களிப்பை மறைக்கவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வரும் இக்காலத்தில், கிறிஸ்தவர்களாகிய நாம் மிஷனெரிகள் இந்தியாவிற்கு, குறிப்பாக தமிழ்நாட்டிற்குச் செய்த நன்மைகளைப் பற்றி அறிந்து கொள்வது முக்கியமானது ஆகும். மிஷனெரிகள் செய்த எல்லாப் பணிகளையும் சொல்ல இங்கு இடம் போதாது என்பதால், 19ம் நூற்றாண்டிற்குப் பின் அவர்கள் செய்த முக்கியமான ஒரு சில பணிகளைப் பற்றி மட்டும் நான் இங்கு சொல்ல விரும்புகிறேன். மிஷனெரிகளின் பணி கிறிஸ்தவர்களுக்கு மட்டுமல்ல, முழு சமுதாயத்திற்கும் மிகுந்த பலன் கொடுத்தது என்பதை அறிந்து கொள்ள இது உதவும்.

### 1.கல்விப் பணி

கிறிஸ்தவ மிஷனெரிகளின் வருகைக்கு முன் தமிழ் நாட்டில் பல குருகுலங்கள் இருந்தன. அங்கே உயர் சாதி ஆண்கள் மட்டுமே படிக்க முடியும். பெண்கள் மற்றும் கீழ்நிலை சாதியினர் படிக்க அனுமதி இல்லை. மிஷனெரிகளின் வருகைக்கு முன் 5% மட்டுமே கல்வி அறிவு இருந்த அன்றைய தமிழகத்துடன் ஒப்பிடும்போது இன்று தமிழ் நாட்டில் 80.6% மக்கள் கல்வி அறிவு பெற்றவர்களாக இருக்கின்றனர். இது தேசிய சராசரியை விட 6% அதிகம் ஆகும். இதற்குப் பல காரணங்கள் உண்டு என்றாலும், இதில் மிஷனெரிகளின் பங்களிப்பு எவரும் மறுக்க முடியாத உண்மை ஆகும். ஏனெனில், மிஷனெரிகள் சென்ற இடங்களில் எல்லாம் கல்வி நிலையங்களை ஆரம்பித்து, பாரபட்சம் இன்றி அனைவரும் படிக்க வழி வகை செய்தனர். சங்கை சீகன் பால்கு ஐயர் அவகள் 1707ல் அனைவரும் படிப்பதற்கான முதல் பள்ளிக் கூடத்தை துவங்கினார். இதைத் தொடர்ந்து தமிழகமெங்கும் அனைவரும் கல்வி பெறுவதற்கான விதையை மிஷனெரிகள் விதைத்தனர்.

அக்காலத்தில் பெண் கல்வி என்பது எட்டாக்கனி மற்றும் தேவையற்ற ஒன்று என்று கருதப்பட்டது. இன்றும் கூட அடிப்படைவாதிகள் **"அடுப்பூதும் பெண்களுக்கு படிப்பெதற்கு?"** என்று சொல்வதை நீங்கள் கேட்டிருக்கக் கூடும். கால்டுவெல் ஐயர் அவர்கள் பெண்களுக்காக பள்ளிக்கூடங்களைத் திறந்த போது, "அடுத்து பசு மாடுகளுக்கு கற்றுக் கொடுக்கப் போகிறீர்களா?" என்று எகத்தாளமாக சொல்லி அவரைப் பரியாசம் பண்ணினதாக சொல்லி, பெண் கல்வி பற்றிய அன்றைய சமுதாய சிந்தனையை அவர் பதிவு செய்திருக்கிறார். பெண் கல்வியின் அவசியத்தை பெற்றோர் புரிந்து கொள்ள மிஷனெரிகள் செய்த முயற்சியின் காரணமாக, பல பெண்கள் படிக்க ஆரம்பித்தனர். தென் இந்தியாவின் முதல் மகளிர் கல்லூரி நெல்லை சீமையில் ஆரம்பிக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து பல கல்லூரிகள் அன்றைய மதராஸ் மாகாணம் எங்கும் துவங்கப்பட்டது. பெண்களுக்குக் கல்வி தேவை இல்லை என்று நம்பின சமுதாயத்தில், கல்வி மூலமாக பெண்கள் வாழ்க்கையின் அர்த்தத்தை நோக்கத்தைப் புரிந்து கொள்ள மிஷனெரிகள் உதவினர். தென் இந்தியாவில் இன்று ஆண்களை விட பெண்கள் அதிகம் பேர் கல்வி அறிவு பெற்றவர்களாக இருப்பதற்கான காரணம் என்ன என்பதைச் சொல்லத் தேவை இல்லை. டாக்டர் முத்து லெட்சுமி ரெட்டி அவர்கள் ஒரு பெண்கள் மாநாட்டில் பேசும் போது, **"இந்த நாட்டில் பெண் கல்விக்காக அரசாங்கம் செய்ததை விட அதிகப் பணியை மிஷனெரிகள் செய்திருக்கின்றனர். இந்திய பெண்கள் மிஷனெரிகளின் கல்விப் பணிக்கு என்றென்றும் நன்றிக்கடன் பட்டிருக்கின்றனர்"** என்று சொல்லி இருக்கிறார்.

கல்வி பெறுவதற்கான வாய்ப்பை சமுதாயத்தின் அனைவருக்கும் கொடுத்து, சாதிவாரியான வேலை, மற்றும் சமுதாயம் சார்ந்த ஒடுக்குதல்கள் ஆகியவற்றில் இருந்து அனேகருக்கு விடுதலையையும் அவர்கள் வாழ்வில் ஒரு நம்பிக்கையையும் மிஷனெரிகள் கொடுத்தனர்.

### 2.ஒடுக்கப்பட்ட மக்களை முன்னேற்றும் பணி

தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவர்கள் சராசரி மனிதர்களாகக் கூட மதிக்கப்படாத ஒரு நிலை அன்று நம் நாட்டில் இருந்தது (இன்றும் கூட ஒரு சில இடங்களில் இருக்கிறது). அவர்கள் மிகவும் பரிதாபத்திற்குரிய நிலையில், சமுதாயத்தால் ஒதுக்கப்பட்டு, உயர் சாதியினரால் சுரண்டப்பட்டு, எல்லா நிலைகளிலும் அவர்கள் மிகவும் பின் தங்கினவர்களாக இருந்தனர். தங்களின் உரிமை இன்னதென்று கூட அறியாதவர்களாகவும், சமுதாய அடிமைத்தனத்தில் இருந்து விடுதலை பெற வழி தெரியாதவர்களாகவும் அவர்கள் இருந்தனர். ராக்லாந்து ஐயர் போன்ற மிஷனெரிகள் தாழ்த்தப்பட்டவர்களாக கருதப்பட்டவர்களுடன் போய் தங்குவதற்கும் தயங்காமல், அவர்களின் முன்னேற்றத்திற்கான பணிகளை முன்னெடுத்தனர். ரேனியஸ் ஐயர் அவர்கள் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர்களையும் சமமாக மதித்து நடத்தினார் என்று வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர்களின் சம உரிமைக்காக மட்டும் மிஷனெரிகள் குரல் கொடுக்காமல், அவர்கள் தாக்கப்பட்டு உபத்திரவத்திற்குள்ளாக்கப்பட்ட போது, அவர்களுடன் கூட இருந்து பாதுகாக்கவும் செய்தனர். மிஷெனெரிகளின் கல்விப்பணி மற்றும் சமுதாயப் பணி காரணமாக தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் சுய மரியாதையைப் பற்றிய ஒரு புதிய உணர்வைப் பெற்று,

ஆண்டாண்டு கால அடிமைத்தன வாழ்வில் இருந்து விடுதலைக் காற்றை சுவாசிக்க ஆரம்பித்தனர். இன்று தென் இந்தியாவில் ஒரு காலத்தில் ஒடுக்கப்பட்டவர்களாக இருந்தவர்கள் இன்று ஆயர்களாகவும், நீதிபதிகளாகவும், காவல் துறை அதிகாரிகள் ஆகவும் மற்றும் பல உயர் பதவிகளில் இருப்பதற்கான அடித்தளம் மிஷனெரிகள் உருவாக்கியது ஆகும்.

### 3.மருத்துவப் பணி

19ம் நூற்றாண்டில் அன்றைய பிரிட்டிஷ் இந்தியாவில் பெரும் நகரங்களில் மட்டுமே ஓரளவுக்கு மருத்துவ வசதிகள் மக்களுக்குக் கிடைத்தது. அதுவும் எல்லோருக்கும் நினைத்தவுடனே கிடைத்துவிடாது. புன்னைக்காயலில் அருட்தந்தை ஹென்றி ஹென்றிக்ஸ் என்பவர் 1550ல் ஒரு மருத்துவ மனையையும், Dr. ராம்சே என்பவர் 1836 இல் நெய்யூரில் ஒரு மருத்துவமனையையும் நிறுவினர் என்றாலும். கிறிஸ்தவ மிஷனெரிகள் நம் மக்களின் முறையான சிகிச்சை மற்றும் மருத்துவ சேவை அவசியம் என உணர்ந்து பல இடங்களில் மருத்துவமனைகளை ஆரம்பிக்கின்ற வரைக்கும், அதன் தேவையைப் பற்றிய சிந்தனை கூட மக்களின் மனதில் இல்லாமல் இருந்தது. மருத்துவமனைகளை நிறுவுவதில் கிறிஸ்தவர்களே முன்னோடிகளாக இருந்தனர். இன்று மிகவும் சிறுபான்மையினராக இருக்கும் கிறிஸ்தவர்கள் தாம் இந்தியாவின் மொத்த மருத்துவமனைகளில் அல்லது மருத்துவ சேவை வழக்குவதில் 22% நிறுவனங்களை நடத்துகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

தென் இந்தியாவில், டாக்டர் ஐடா ஸ்கடர் அவர்களின் மருத்துவச் சேவை மிக முக்கியமானது ஆகும். ஏனெனில், ஐடா ஸ்கடர் அவர்களின்



சேவை மருத்துவ சேவையின் தரத்தை உயர்த்தியதுடன், இந்த தேசத்திற்கு அனேக தரமான மருத்துவர்களையும் உருவாக்கிக் கொண்டிருக்கிறது. ஐடா ஸ்கடர் அவர்களின் தந்தை தான் அமெரிக்க பாப்திஸ்து அமைப்பின் முதலாவது மருத்துவ மிஷனெரியாக இந்தியாவிற்கு வந்தவர் என்றாலும், ஐடா அவர்கள் இந்தியாவில் தங்கி ஊழியம் செய்வதில் விருப்பம் இல்லாதவர்காகவே இருந்து வந்தார். எனினும், ஒரு ஆணிடம் போய் சிகிச்சை பெறச் செய்வதா என்ற குழப்பத்திலும் தயக்கத்திலும் ஒன்றன் பின் ஒன்றாக இறந்த மூன்று பெண்களின் மரணம் ஐடாவின் மனதில் ஒரு மாற்றத்தை உண்டு பண்ணியது. அதன் பின் மருத்துவம் பயின்று இன்று சிஎம்சி வேலூர் (CMC Vellore) என்று அறியப்பட்டிருக்கிற கிறிஸ்தவ மருத்துவ சேவை நிறுவனத்தைத் துவங்கினார் என்பது வரலாறு. சாதாரணமாக ஒரு சிறிய இடத்தில் 1900இல் ஆரம்பிக்கப்பட்ட ஐடா ஸ்கடரின் மருத்துவச் சேவை இன்று ஆசியாவிலேயே மிகவும் பெரிய ஒரு மருத்துவ சேவை மையமாக வளர்ந்து நிற்கிறது. அது மட்டுமல்ல, அனேக கிறிஸ்தவ மிஷன் மருத்துவமனைகளை ஆரம்பிப்பதற்கான உந்துதலையும் ஐடா ஸ்கடர் விதைத்திருக்கிறார்.

மருத்துவம் பற்றிய மூட நம்பிக்கைகளையும், அறுவை சிகிச்சை பற்றிய தயக்கங்கள் மற்றும் கேள்விகளை அகற்றி, பிரசவ காலத்திற்கு முன்னும் பின்னும் பெண்களுக்குத் தேவையான மருத்துவ பரிசோதனைகள் மற்றும் உரிய சிகிச்சைகள் வழங்குதலில் ஒரு பெரும் விழிப்புணர்வை உண்டாக்கி, ஊட்டச்சத்து குறைபாடு மற்றும் ஆரோக்கியமான பழக்கவழக்கங்கள் ஆகியவற்றைப் பற்றிய புரிதலை வழங்குவதில் கிறிஸ்தவ மருத்துவ மிஷனெரிகள் மற்றும் மருத்துவ மனைகளின் பங்களிப்பு மிகவும் குறிப்பிடத்தக்கது ஆகும். சமுதாயத்தில் உள்ள ஏழைகள் மற்றும் நோயாளிகளுக்கு சேவை செய்வதில் மிஷன் மருத்துவ மனைகள் கிறிஸ்துவின் அன்பை இந்த உலகத்திற்கு காட்டின.

### 4.பெண்களின் முன்னேற்றத்தில் மிஷனெரிகளின் பங்கு

முன்பு குறிப்பிட்டது போல, இந்திய சமுதாயத்தில் பெண்களின் நிலையானது மிகவும் பரிதாபமானதாக ஒரு காலத்தில் இருந்தது. பெண்களை உதாசீனப்படுத்துதல், பெண்களுக்கான உரிமைகளை வழங்க மறுத்து, அவர்களை அடக்குதல் என்பது ஏற்றுக் கொள்ளப்பட்ட நடைமுறையாக இருந்து வந்தது. பெண்களிடம் அதிகாரம் இல்லாமலும், மூட நம்பிக்கை மற்றும் சாதி கட்டுப்பாடுகளை மீறுதல் போன்ற பயங்களினாலும், வீடுகளில் ஒரு தலைப்பட்சமான நடைமுறைகளை பெண்களே அனுமதித்தும், அதை மற்றவகளும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று நிர்ப்பந்தித்தும் இருந்து வந்தனர். இப்படியாக அவர்கள் சமுதாய நடைமுறைகளால் பாதிக்கப்பட்டவர்களாகவும், பாதிப்பை உண்டாக்குகிறவர்களாகவும் இருந்தனர். கல்வி மற்றும் மருத்துவச் சேவையில் நம் மிஷனெரிகள் பெண்களை ஒதுக்கி வைக்காமல், அவர்களுக்கும் உரிய சேவை மற்றும் உரிமைகள் கிடைக்க வழி வகுத்தனர் என்பதை நாம் பார்த்தோம்.

பெண்களுடைய சமுதாய முன்னேற்றம் மற்றும் விடுதலையில் பெண்களை பங்கேற்க வைத்ததில் திருமணம் செய்யாமல் மிஷனெரிப் பணி செய்ய வந்த பெண்களின் பங்கு பற்றி நாம் அறிந்து கொள்ள வேண்டும். 1844 ல் திருநெல்வேலிக்கு மிஷனெரியாக வந்த கிபேர்ன் அம்மையார் (Miss. C.C.Giberne) விதவைகளையும், வயதான பெண்களையும் ஆசிரியப் பணியில் ஈடுபடுத்தி, வேதாகமப் பெண்கள் குழுவாக அவர்களை செயல்பட வைத்து, கல்வி பயில முடியாத பெண்கள், பெண் பிள்ளைகள் கற்றுக் கொள்ளவும் ஒரு வாய்ப்பை உண்டு பண்ணினார். மிஷனெரிகளின் மனைவிமார்கள் பெண்கள் ஊழியத்தில் (Zenana Mission) ஈடுபட உற்சாகப்படுத்தப்பட்டு, கல்வி கற்க விரும்புகிற அல்லது படிப்பைப் பாதியில் நிறுத்திய பெண்கள் சிறப்பு வகுப்புகள் தொடர்ந்து படிக்க வாய்ப்பு கொடுக்கப்பட்டது. மிஷனெரிப் பெண்கள் ஊழியம் காரணமாக சிவகாசி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் ஒரு பெரும் மாற்றம் உண்டாகியது. பெண் மிஷனெரி ஊழியர்கள் செய்த பணியில், ஏமி கார்மைக்கேல் அவர்கள் செய்த பணியை எவரும் மறக்க முடியாது/கூடாது. 1895ல் டோனாவூர் எனும் கிராமத்தில் ஆதரவற்ற பிள்ளைகளுக்காக ஒரு அமைப்பைத் துவங்கின ஏமி கார்மைக்கேல் அம்மையாருடைய முழு கவனமும் இந்து கோவில்களுக்கு மூட நம்பிக்கைகளின் காரணமாக நேர்ந்து விடப்படும் அபலைச் சிறுமிகளைப் பாதுகாத்து அவர்கள் வாழ்வில் பெரும் மாற்றத்தை உண்டாக்குவதாக இருந்தது. கோவிலுக்கு நேர்ந்து விடப்பட்ட சிறுமிகள் தேவ தாசிகள் என்றழைக்கப்பட்டனர். அவர்கள் திருமண வாழ்வில் ஈடுபட முடியாது, ஆனால் ஊரில் உள்ள உயர் சாதியினர் மற்றும் சக்தி வாய்ந்த மனிதர்களினால் பாலியல் ரீதியாக பலவந்தப் படுத்தப்பட்டு, தவறாக நடத்தப்பட்டனர். இத்தீய பழக்கத்தை ஒழிக்க தேவனால் அனுப்பப்பட்ட ஒரு தேவ ஊழியராக ஏமி கார்மைக்கேல் அம்மையார் இருந்தார்கள் என்றால் மிகையாகாது.

சாதாரணப் பெண்களே உரிய உரிமைகள் இல்லாமல் வாழ்ந்தார்கள் என்றால், கணவனை இழந்த கைம்பெண்களின் நிலைமையோ சொல்லி மாளாது. கணவனை இழந்த பெண்கள் வாழ்நாளெல்லாம், மிகச் சிறிய வயதில் கணவன் மரித்தாலும் கூட, விதவையாகவே வாழ வேண்டும். அந்நாட்களில், குழந்தைத் திருமணம்

என்பது இந்தியாவில் பரவலாக இருந்து வந்தது. ஆகவே, பருவம் அடைவதற்கு முன்னமே விதவைகளாக்கப்பட்டு, வாழ்நாளெல்லாம் சமுதாயத்தின் நிந்தனைக்கும் அவச்சொல்லுக்கும் உள்ளாகி வாழ்ந்த பெண்கள் ஏராளம். கிறிஸ்தவ மிஷனெரிகள் மற்றும் சமுதாய சிந்தனையுள்ள தலைவர்களின் கூட்டு முயற்சியுடன் விதவைகள் மறுவாழ்வு சட்டம் நிறைவேற்றப்பட்டு, அப்பெண்களுக்கு வாழ்வதற்கு ஒரு வாய்ப்பு கொடுக்கப்பட்டது.

ஒரு ஆண் இறந்து தகனம் செய்யப்படும் போது, அவனோடு கூட அவன் மனைவியையும், அவள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், உயிரோடு எரிக்கும் வழக்கம் அக்காலத்தில் பல இடங்களில் இருந்து வந்தது. இந்நடைமுறை **"உடன்கட்டை ஏறுதல்"** என்று அழைக்கப்பட்டு வந்தது. மரித்த கணவனுடன் எரியூட்ட நிறுத்தப்பட்டிருந்த கோகிலா என்ற பிராமணப் பெண் ஒரு கிறிஸ்தவரால் காப்பாற்றப்பட்டு, நெல்லையின் முதல் சபையான குளோரிந்தாள் ஆலயத்தை நிறுவினதுடன், தென் மாவட்டங்களில் பெண்களின் வளர்ச்சிக்கு மிகச் சிறந்த சேவையையும் செய்தார் என்பது வரலாறு. கிறிஸ்தவ மிஷனெரிகளின் சீரிய முயற்சி மற்றும் பங்களிப்பினால், உடன்கட்டை ஏறும் வழக்கமும் ஒரு முடிவுக்கு வந்தது. இன்னும் முலை வரி சட்டம், சாதிய கொடுமைகள் என பல விஷயங்களில் பெண்கள் அடிமைப்பட்டிருந்ததையும். அதற்கு மிஷனெரிகள் ஆற்றிய பங்கையும் சொல்லிக் கொண்டே போகலாம். சுருங்கக் கூறின், பெண்கள் ஒரு மரியாதையான வாழ்வை சமுதாயத்தில் வாழவும், அவர்களுடைய பங்களிப்பை குடும்ப மற்றும் சமுதாய முன்னேற்றத்திற்குக் கொடுக்கவும் கல்வி மற்றும் பெண்கள் குறித்த சிந்தனையில் மாற்றத்தை உண்டு பண்ணுதல் மூலமாக மிஷனெரிகள் பெரும் பங்காற்றினர். முத்து லட்சுமி ரெட்டி அம்மையார் சொன்னது போல, கிறிஸ்தவ மிஷனெரிகள் பெண்கள் முன்னேற்றத்திற்கு ஆற்றிய பணிக்கு இந்தியப் பெண்கள் நன்றிக் கடன் பட்டிருக்கின்றனர்.

### 5.தமிழ் மொழி வளர்ச்சிக்கு மிஷனெரிகளின் பங்கு

இந்திய மொழிகளில் மிகவும் பழைமையானதும், உயர்தனி செம்மொழியாகவும், சங்க காலம் முதற்கொண்டு ஏராளமான இலக்கியங்களை தன்னகத்தே கொண்ட மொழி தமிழ் மொழி என்று அறிவார்ந்த அறிஞர்கள் அனைவரும் ஏற்றுக் கொள்கிற உண்மை ஆகும். ஆயினும், பிராமணர்களின் ஆதிக்கத்தில் தமிழ் மொழியைப் பற்றிய தவறான கருத்துருவாக்கம் உண்டாக்கப்பட்டு, தமிழ் மொழியின் பயன்பாட்டை குறைக்க முயற்சிகள் முன்னெடுக்கப்பட்டிருந்தன. தமிழ் இலக்கியங்கள் ஓரங்கட்டப்பட்டு வடமொழி ஆதிக்கம் தலை தூக்கி இருந்தது. இந்தியாவிற்கு சமயப் பணி ஆற்ற வந்த மிஷனெரிகள் தங்கள் நற்செய்திப் பணிக்காக தமிழ் மொழியைக் கற்றனர் என்றாலும், அதன் பின் அவர்கள் ஆற்றியப் பணி ஒரு மொழி மறுமலர்ச்சியை உண்டாக்கி அனைவருக்கும் தமிழ் இலக்கியங்கள் கிடைக்க வழிவகை செய்தது.

கிறிஸ்தவ மிஷனெரிகள் தாம் தமிழில் அச்சிடப்பட்ட முதல் நூல், புத்தகம், சொல்லகராதி, மாத மற்றும் தினசரி இதழ்கள் என அனைத்தையும் ஆரம்பித்து வைத்தவர்கள் ஆவார். கிபி 1578 ஆம் ஆண்டிலேயே ஹென்றி ஹென்றிக்ஸ் என்ற போர்த்துகீசிய மிஷனெரி தம்பிரான் வணக்கம் என்ற நூலை அச்சிட்டு, இந்திய மொழிகளிலேயே முதலாவது அச்சில் ஏறிய மொழி என்ற பெருமையை தமிழ் மொழிக்குப் பெற்றுத் தந்தார். பின் வந்த கிறிஸ்தவ மிஷனெரிகள் அச்சு இயந்திரத்தை இந்தியாவிற்கு வரவழைத்து, அனேக தமிழ் நூல்களை அச்சிட்டு பெரும் தொண்டாற்றினர். ராபர்ட் டி நொபிலி, கான்ஸ்டான்டைன் ஜோசப் பெஸ்கி, கால்டுவெல், ஜி.யு. போப் என பல கிறிஸ்தவ மிஷனெரிகள் தமிழ் மொழி வளர்ச்சி மற்றும் தமிழ் மொழியின் புகழை உலகறியச் செய்தப் பணிகள் ஆகியவற்றை எழுத வேண்டுமானால் ஒரு தனி புத்தகமே போட வேண்டும்.

தமிழ் மொழிக்கு கிறிஸ்தவ மிஷனெரிகள் ஆற்றிய பணிகளில் மிகவும் முக்கியமானது என்னவெனில், அதுவரையிலும் கற்றவர்கள் மற்றும் உயர் சாதியினருக்கு மட்டுமே சொந்தமாக இருந்த தமிழ் நூல்கள் பாமரர்கள் கையிலும் கிடைக்கச் செய்து, தமிழ் மொழி மற்றும் பண்டைய நூல்கள் பற்றிய புரிதல் மற்றும் பயன்பாட்டை சமுதாயத்தில் அனைவருக்கும் சொந்தமானதாக ஆக்கினர். இது பல சமுதாய மறுமலர்ச்சிப் பணிகள், பகுத்தறிவு இயக்கங்கள், தமிழ் மொழியின் பெருமையை மீட்டெடுத்தல், இழந்து போன ஆதித் தமிழ் கலாச்சாரம் பற்றிய ஆர்வம் என பல வழிகளில் தமிழகம் முன்னேறியதாக இருக்க வழி வகை செய்தது.

### நம் பங்கு என்ன?

கிறிஸ்தவ மிஷனெரிகள் தமிழ்நாடு மற்றும் இந்தியாவின் வளர்ச்சிகு மிகவும் மகத்தான சேவை செய்திருக்கின்றனர். அதற்கு அவர்கள் உருவாக்கி விட்டுச் சென்ற அமைக்குகள் இன்றும் நின்று அவர்களின் பங்களிப்பு பற்றி சான்று பகர்கின்றன. சமயப்பணி வந்த இடத்தில், அவர்கள் சமுதாயத்தில் நிலவி வந்த சாதிய கொடுமைகள், பொருளாதார சுரண்டல், அடிமைத்தனம் ஆகியவற்றை மனதில் கொண்டு தங்களால் இயன்றளவுக்கு ஒரு சமதர்ம சமுதாயத்தை அமைக்கத் தேவையான அடிப்படைக் கட்டுமானங்களை அமைத்துக் கொடுத்தனர். மனிதநேயமற்ற பாலின/சாதிய கொடுமைகள் மற்றும் மூட நம்பிக்கைகளில் ஊறித் திளைத்திருந்த அக்கால சமுதாயத்தின் நிலைமையில் ஒரு பெரும் மாற்றத்தை அவர்கள் உண்டாக்கியதன் விளைவை நாம் இன்று கண்கூடாக காண்கிறோம். எண்ணிக்கையில் சிறிதாக இருந்தாலும், மிஷனெரிகள் தாங்கள் சேவை செய்த இடங்களில் உப்பாகவும், வெளிச்சமாகவும் இருந்து மக்களுக்குச் சமய மற்றும் சமுதாயப் பணி செய்தனர். சமுதாயத்தின் அடிமட்டத்தில் இருந்தவர்களுடைய வாழ்க்கை மேம்பட, சாதிய அடிமைத்தனங்களில் இருந்து விடுதலை அடைய தமிழ் நாட்டில் கிறிஸ்தவ மிஷனெரிகள் மகத்தான பங்காற்றினர். ஆன்மிக விடுதலைக்கான பணிகளில் ஈடுபட்ட மிஷனெரிகள் சமுதாய விடுதலையின் அவசியத்தை புறக்கணிக்கவில்லை. இந்திய வரலாற்றின் பக்கங்களில் கிறிஸ்தவர்களின் பங்களிப்பை எப்படியாவது கிழித்தெறிந்து, சமதர்ம வாழ்க்கையில் இருந்து மறுபடியும் சனாதன தர்ம வாழ்க்கைக்கு தேசத்தை திருப்பி விட வேண்டும் என்று சிலர் முனைப்புடன் செயல்படும் இக்காலத்தில், கிறிஸ்தவர்களாகிய நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம்? கிறிஸ்தவர்கள் மற்றும் கிறிஸ்தவத்திற்கெதிராக சிந்தனை ரீதியாக தொடர் உளவியல் தாக்குதல்கள் நிகழ்த்தப்பட்டுக் கொண்டிருக்கும் இக்காலத்தில், நம் மிஷனெரிகள் செய்தப் பணிகளைப் பற்றி குறைந்த பட்ச புரிதலையாவது அடைய முயற்சி செய்வது நாம் செய்யக் கூடிய முதல் முயற்சியாக இருக்கட்டும். மிஷனெரிகள் விதைத்துச் சென்ற தியாகத்தின் விதைகளை நாம் சுமந்து, அனைவரும் கிறிஸ்துவுக்குள் ஒரு மெய்யான ஆன்மீக விடுதலை அடைய நாம் செய்யக் கூடியது என்ன என்பதைப் பற்றி யோசித்துப் பார்ப்போம். நம்மால் செய்ய முடியாதவைகளை நாம் செய்ய வேண்டும் என்று தேவன் எதிர்பார்ப்பதில்லை. நாம் செய்யக் கூடிய சிறிய பணிகளைக் கூட செய்யாமல், வேறு யாராவது செய்யட்டும், நமக்கெதுக்கு வம்பு என்று சொல்லி நாம் ஒதுங்கிச் செல்கிறோமா என சிந்தித்துப் பார்த்து நம்மை நாமே ஆராய்ந்து பார்ப்போம்.

**அற்புதராஜ் சாமுவேல், பெங்களூர்**



தென்தமிழகத்தில் பணி செய்த

# கிறிஸ்தவ மிஷன் இயக்கங்களின் பன்முகப் பங்களிப்புகள்

– ஓர் வரலாற்றுப் பார்வை

## I.கத்தோலிக்கக் கிறிஸ்தவ மிஷன் இயக்கங்கள்

### பிரான்சிஸ்கன் கத்தோலிக்க துறவற சபை மிஷன் (கோவா மிஷன்)

பிரான்சிஸ்கன் துறவற சபை தூய. அசிசி பிரான்சிஸ் அவர்களால் 1209 இல் தொடங்கப்பட்டது. இந்தியாவில் கோவாவை மையமாகக் கொண்டு 1517 இல் பிரான்சிஸ்கன் கத்தோலிக்க துறவற சபை மிஷனரி பணிகளை தொடங்கியது. அவர்களது மிஷனரி பணிகளால் கோவா கத்தோலிக்க Arch Diocese 1534 இல் உருவானது. அவற்றின் மிஷன் பணிகள் மலபார் எனப்பட்ட இன்றைய கேரளத்திலும் தென் தமிழகத்திலும் விரிவுபடுத்தப்பட்டது. தென் தமிழகத்தில் தொடக்க காலத்தில் கோவா மிஷன் பங்கு தந்தையர்கள் இறை பணியாற்றினர்.

### இயேசு சபை

உலகின் மிகப்பெரிய மிஷனரி இயக்கம் இயேசு சபையே ஆகும். இக்னேஷியஸ் லயோலா தலைமையில் அக்காலத்தில் பாரிஸ் பல்கலைக்கழகத்தில் கல்வி பயின்று வந்த பிரான்சிஸ் சேவியர் மற்றும் இளைஞர்களான 5 நண்பர்கள் கொண்ட ஏழு பேர் மூலம் 15.08.1534 இல் மோன்மார்த் குன்றின் உச்சியில் இருந்த புனித டென்னிஸ் தேவாலயத்தில் திருப்பலி, திருவிருந்துக்கு முன் இறைப்பணிக்கு அர்ப்பணித்தல், இறை பிரசன்னத்தில் வாழ்தல் எனும் இரு வார்த்தைப்பாடு உறுதிமொழிகளால் இச்சபைக்கு அடித்தளமிடப்பட்டது. 1536 இல் 3 பேர் இணைய இந்த ஐக்கியம் 10 பேர் கொண்டதாக மாறியது. 1540 இல் கத்தோலிக்க கிறிஸ்தவ திருச்சபையின் முறையான அங்கீகாரத்தை இயேசு சபை பெற்றது.

### தென் தமிழகத்திற்கு இயேசு சபையின் வருகை

தூத்துக்குடியில் மீனவர் - இஸ்லாமியர் இடையே 1532 இல் ஏற்பட்ட மோதலில் பாதிக்கப்பட்ட மீனவர்களுக்காக இஸ்லாமியரோடு போர் செய்து போர்த்துக்கீசியர் வெற்றி பெற்றுக் கொடுத்தனர். அதன் நன்றிக்கு அடையாளமாக ராமேஸ்வரம் முதல் கன்னியாகுமரி வரையிலான கிழக்கு கடற்கரையோர மீனவர்கள் ஒட்டுமொத்தமாக போர்த்துகீசியர் பின் பற்றிய கிறிஸ்துவத்தை ஏற்றுக் கொண்டனர். அவர்கள் ஞானஸ்நானம் பெற ஆயத்தமாக இருந்தனர். அவர்களுக்காக இரு இயேசு சபை பாதிரியார்கள் போப்பாண்டவர் அனுமதியின் பேரில் அனுப்பப்பட்டனர் அவர்களில் ஒருவரே தூய. சவேரியார் எனப்படும் பிரான்சிஸ் சேவியர்.

### மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல்

தூய சவேரியார் மூலம் 1543 இல் சுமார் இருபதாயிரத்திற்கும் மேற்பட்ட மீனவ பரதவரும் 1544 இல் குமரி முதல் நீரோடி வரையிலான மேற்கு கடற்கரையோரத்தில் ஒரே மாதத்தில் சுமார் பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட மீனவர்களும் கிறிஸ்தவராயினர். தூய சவேரியார் காலத்தில் அவரது போதனைகள் மூலம் தென் தமிழகத்தின் உட்பகுதிகளில் வாழ்ந்த நாடார்கள், ஆதிதிராவிடர்கள் கிறிஸ்தவத்தை ஏற்றனர். தூய சவேரியாருக்கு பின்னர் தென் தமிழ்நாட்டிற்கு வந்த இயேசு சபை போதகர்களான இராபர்ட் டி நொபிலி (1577-1656), தந்தை.பல்தசார் டி கோஸ்தே,

புனித அருளானந்தர் எனப்படும் ஜான் டி பிரிட்டோ (1647-1693), வீரமாமுனிவர் எனப்படும் கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி (1680-1747), சின்ன சவேரியார் ஜேம்ஸ் தே ரோசி அடிகளார். தந்தை. ட்ரிங்கால் அடிகளார் (1815-1892) தந்தை.கௌசானல் அடிகளார் (1850-1930), தாத்தாசாமி. இலெவே அடிகளார்(1884-1973) உட்பட பல இயேசு சபை மிஷனரிகள் இறைப்பணியோடு சமூகப்பணி, கல்விப்பணி, மருத்துவப் பணி என பன்முக பங்களிப்பைத் தென் தமிழகத்திற்கு தந்தனர்.

**இயேசுவின் திருஇருதய சகோதர சபை –SHJ**

இயேசுவின் திரு இருதய சகோதர சபை –SHJ எனும் மிஷனரி தரிசனம் கொண்ட துறவற சபை இயேசு சபை போதகர் தந்தை கௌசானல் அடிகளார் அவர்களால் 11.02.1903 இல் நிறுவப்பட்டது. இந்தத் துறவற சபை நற்செய்தி அறிவித்தல் மற்றும் கல்விக்கு முக்கியத்துவம் அளித்தது..

**கத்தோலிக்க மிஷன் இயக்கங்களின் பன்முக பங்களிப்புகள்**

- தூய சவேரியார் கால முதல் அவருக்கு பின் வந்த அனைத்து இயேசு சபை மிஷனரிகளும் கல்விப் பணிக்கு முக்கியத்துவம் கொடுத்தனர் சாதி மத பாகுபாடின்றி அனைவரும் அவர்களது கல்விக்கூடங்களில் சேர்க்கப்பட்டனர்.
- கிழக்கு மற்றும் மேற்குக் கடற்கரையோர மீனவருக்கு மதுரை நாயக்கர் ஆட்சியாளர்கள், திருவிதாங்கூர் சமஸ்தான ஆட்சியாளர்கள் மூலம் பாதிப்பு ஏற்பட்ட போதெல்லாம் அவர்களுக்காக முழு அர்ப்பணிப்போடு உதவி செய்வதில் தூய. சவேரியார் பெரும் பங்காற்றினார். மீனவ கிராமங்களில் தினமும் காலை, மாலை ஆராதனையையும், குருசடி வழிபாட்டையும் தொடங்கினார் இன்றளவும் அது தொடர்கிறது.
- தூய அருளானந்தர் நற்செய்திப் பணி, சமூக விடுதலை பணி ஆகியவற்றில் ஆர்வம் கொண்டவராக சிறப்புறப் பணியாற்றினார் . போர்த்துக்கல் நாட்டின் சவேரியார், மறவ நாட்டு அப்போஸ்தலர் என புகழப்பட்ட தூய அருளானந்தர் மூலம் பல்லாயிரக்கணக்கானோர் நற்செய்தியை ஏற்று திருமுழுக்குப் பெற்றனர்.
- வீரமாமுனிவர் சமூக, தமிழ் உரைநடை முன்னேற்ற பணிகளை முன்னெடுத்துச் சென்றார். இவரது காலத்தில் தேர் பவனி கத்தோலிக்க தேவாலய திருவிழாக்களில் இடம் பெற்றது. பெண் தெய்வ வழிபாட்டில் தமிழர்கள் ஈடுபாட்டுடன் இருப்பதைக் கண்ட இவர் தூய. மரியன்னை மூலம் வழிபாடு செய்கிற காரியங்களுக்கு முக்கியத்துவம் அளித்தார்.
- தந்தை டிரிங்கால் அடிகளார் ஒடுக்கப்பட்ட பிற்பட்ட மற்றும் தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்கு ஆதிக்க சக்திகளிடமிருந்து விடுதலை பெற்று கொடுத்ததோடு அந்த இடங்களில் பள்ளிக்கூடங்களை திறந்து கல்வியறிவுக்கு வழி வகுத்தார். கொல்லங்கொண்டான், சேத்தூர் போன்ற ஜமீன்களின் ஆதிக்கத்திலிருந்த சுந்தரநாச்சியாபுரம் கிராம நிலங்கள் பனங்காடுகளை அந்த ஜமீன்தார்களுக்கு பணம் கொடுத்து வாங்கி அவற்றை தமது ஆளுகைக்குள் கொண்டு வந்து அந்த கிராமப் பிற்பட்ட நாடார் மக்களுக்கு அவற்றை இலவசமாக கொடுத்தார். வத்திராயிருப்பு வட்டாரத்திலுள்ள புதுப்பட்டி, மேலக்கோபாலபுரம் மற்றும் சுற்றுவட்டார கிராம ஆதிதிராவிட சமூக மக்களுக்கு ஆதிக்க சமூகத்தினரிடமிருந்து விடுதலை பெற்றுக் கொடுத்து சுயாதீனம் கிடைக்கச் செய்தார் புதுப்பட்டியில் உள்ள டிரிங்கால் மேல்நிலைப்பள்ளியும், தந்தை டிரிங்காலின் தமிழ் வேதாகம மொழிபெயர்ப்பும் அவரது பணிகளுக்கு சான்றாக இன்றளவும் விளங்குகிறது.
- சருகணி சுற்று வட்டார கிராமத்து மக்களுக்கு தந்தை லெவே அடிகளார் இது போன்ற நற்பணிகளை செய்தார்.
- தந்தை கௌசானல் அடிகள் கழுகுமலையில் 1896 இல் கலவரத்தால் பாதிக்கப்பட்ட ஒடுக்கப்பட்ட பிற்பட்ட நாடார் சமூகத்தினருக்கு சிறந்த வழக்கறிஞர் மூலம் வழக்கு தொடுத்து உரிமைகளை பெற்றுக் கொடுத்தார். இவர்கள் 1893 இல் கிறிஸ்தவத்தை ஏற்றிருந்தனர். கௌசானல் மீதான அன்பினால் எஞ்சியிருந்த அனைவரும் ஒட்டுமொத்தமாக கத்தோலிக்க கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொண்டார்கள்.
- வடக்கன்குளத்தில் பெரும்பான்மையாக இருந்த பிற்பட்ட நாடார் சமூகத்தினருக்கு அங்குள்ள கத்தோலிக்க திருக்குடும்ப தேவாலயத்தில் உரிமைகள் மறுக்கப்பட்டு தேவாலயத்தின் முக்கிய பகுதியில் அவர்கள் சென்று வழிபட்டுவிடாதபடி தடுப்புச்சுவர் கட்டப்பட்டிருந்தது வடக்கன்குளம் பங்குதந்தை ஆக தந்தை கௌசானல் அடிகளார் பொறுப்பேற்றபோது ஒரே நாள் நள்ளிரவில் அந்த தடுப்புச்சுவரை முழுவதுமாக இடித்து அகற்றி தேவாலயத்தில் அனைத்து சாதியினருக்கும் சமத்துவம் கிடைக்கச் செய்தார் விக்கிரமசிங்கபுரம் அருகில் பிற்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்கள் வேலையின்றி கஷ்டப்பட்ட போது சபையின் பாபநாசம் கட்டளைமலை எஸ்டேட் காபி தோட்டத்தில் அவர்களுக்கு வேலையும் சிறப்பான ஊதியமும் கொடுத்து அவர்களது பசிப்பிணியை போக்கினார். விக்கிரமசிங்கபுரத்தை ஒட்டி உச்சங்குளம் என்ற இடத்தை விலைக்கு வாங்கி இருதயகுளம் என்ற பெயரில் அங்கு கிறிஸ்தவ மிஷன் கிராமத்தை தந்தை கௌசானல் உருவாக்கினார்.



## II. புராட்டஸ்டன்ட் சீர்திருத்த கிறிஸ்தவ மிஷன் இயக்கங்கள்

### A.லுத்தரன் கிறிஸ்தவ மிஷன் இயக்கங்கள்

#### டேனிஷ் மிஷன்

புராட்டஸ்டண்ட் கிறிஸ்தவத்தில் கடல் கடந்து மிஷனரி பணி செய்ய முன் வந்த முதல் நாடு டென்மார்க் ஆகும். டென்மார்க் அரசர் நான்காம் பிரெட்ரிக் Royal Missionaries என்ற சிறப்புடன் சீகன்பால்க், ப்ளுட்சோ ஆகிய இரு மிஷனரிகளை தமிழ்நாட்டிற்கு அனுப்பினார். அவர்கள் இருவரும் 09.07.1706 இல் தரங்கம்பாடி வந்து சேர்ந்தனர். இவர்களே தென் தமிழகத்திற்கு வந்த முதல் பிராட்டஸ்டண்ட் மிஷனரிகள் ஆவர். இவர்கள் சார்ந்த மிஷன் டேனிஷ் மிஷன்/லைப்சிக் மிஷன் எனப்பட்டது.

#### ஸ்வீடிஷ் மிஷன்

ஸ்வீடன் நாட்டை தலைமையிடமாகக் கொண்ட இந்த லுத்தரன் மிஷனரி இயக்கம் தமிழகத்தில் நற்செய்தியை பரப்புவதில் முக்கிய பங்கு வகித்தது.

#### ஜெர்மன் மிஷன்

ஜெர்மன் நாட்டை தலைமையிடமாகக் கொண்ட இந்த லுத்தரன் மிஷனரி இயக்கம் தென் தமிழகத்தில் நற்செய்தியை பரப்புவதில் முக்கிய பங்கு வகித்தது. மேற்கண்ட மூன்று மிஷனரி சங்கங்கள் மூலமாக உருவான திருச்சபைகள் தொடக்ககாலத்தில் லைப்சிக் இவாஞ்சலிக்கல் லுத்தரன் மிஷன் சர்ச் என அழைக்கப்பட்டன. அவை 19.01.1919 முதல் Tamil Evangelical Lutheran Church என அழைக்கப்படுகின்றன.

#### டேனிஷ் மிஷனரி சொசைட்டி

இந்த லுத்தரன் மிஷனரி இயக்கம் 1863 இல் தமிழகத்தில் மேலபட்டம்பாக்கத்தில் மிஷன் பணிகளை தொடங்கியது இந்த மிஷன் இயக்கம் மூலம் உருவான சபைகள் கடலூரைத் தலைமையிடமாகக் கொண்டு ஆற்காடு லுத்தரன் சபை என அழைக்கப்படுகிறது.

#### லுத்தரன் சர்ச் மிஷன் மிஷனரி சினாட்

இந்த லுத்தரன் மிஷனரி இயக்கம் 1894 முதல் தமிழகத்தில் மிஷன் பணிகளை தொடங்கியது. இந்த மிஷன் இயக்கம் மூலம் உருவான சபைகள் ஆம்பூர், நாகர்கோவில், திருவனந்தபுரம் ஆகிய மூன்று சினாடு தலைமையிடங்களைக் கொண்டு இந்திய சுவிசேஷ லுத்தரன் சபை IELC என இயங்குகிறது.

#### லுத்தரன் மிஷன் இயக்கங்களின் பன்முக பங்களிப்புகள்

- இந்தியாவில் முதன்முதலாக மதிய உணவுடன் பள்ளிக்கூடம், இலவச உண்டு உறைவிடப் பள்ளிக்கூடம், குக்கிராமங்களில் பள்ளிக்கூடம் தொடங்கப்பட்டது.
- மருத்துவமனைகள் தொடங்கப்பட்டது அதில் குறைந்த செலவில் மிகச் சிறப்பான மருத்துவ உதவி கிடைத்தது.
- காகிதப்பட்டறை எனும் நூல் வெளியீட்டுக்கான காகிதம் தயாரிப்பு பணி அதில் வேலைவாய்ப்பு வழங்கப்பட்டது.
- இந்தியாவிலேயே முதல் இந்திய சுதேசக் குருவானவராக ஆரோன் அவர்களுக்கு குருத்துவ அருட்பொழிவு வழங்கப்பட்டது.
- ஒடுக்கப்பட்ட கிறிஸ்தவர்களை ஒன்றுசேர்த்து கிறிஸ்தவ கிராமம் உருவாக்கப்பட்டது.

### B.ஆங்கிலிக்கன் கிறிஸ்தவ மிஷன் இயக்கங்கள்

#### S.P.C.K - Society of Propagation of Christian Knowledge

இந்த மிஷினரி இயக்கம் 1698இல் ஆங்கிலிக்கன் திருச்சபையை சேர்ந்தவர்களால் இங்கிலாந்தில் தொடங்கப்பட்டது. இது கிழக்கிந்திய மிஷன் என்றும் ஆங்கிலேய மிஷன் என்றும் அழைக்கப்பட்டது. சுவ்ட்ஸ், பெப்ரீசியஸ், சுவார்ட்ஸ், சத்தியநாதன் ஆகிய பெரிய போதகர்கள் இந்த மிஷன் இயக்க ஊழியராகப் பணி செய்தனர். தென் தமிழகத்தின் முதல் இங்கிலாந்து சார்ந்த மிஷன் இயக்கம் இதுவே.

#### S.P.G - Society of Propagation of Gospel

1701 இல் ஆங்கிலிக்கன் திருச்சபையை சேர்ந்தவர்களால் இங்கிலாந்தில் தொடங்கப்பட்டது அதில் உயர்நிலையினர் - High Order எனப்பட்டோர். இந்த மிஷன் இயக்கத்தை ஆதரித்தனர். 1825 இல் SPCK மிஷனரிகளை SPG ஏற்பது என தீர்மானித்து. 1826 இல் அது நடைமுறைப்படுத்தப்பட்டது. இந்த மிஷன் இயக்கம் மத்திய தமிழகத்தில் திருச்சி தென் தமிழகத்தில் தூத்துக்குடி, நாசரேத், முதலூர், சாயர்புரம், இடையங்குடி ஆகிய இடங்களைத் தலைமையிடமாகக் கொண்டு செயல்பட்டது. ரோஷன், இரியன் பிரதர்ட்டன், கேமரர் மர்காஷிஸ், கோர்ண்ஸ், ஷராக், கோலாப் உட்பட பல சிறப்பான மிஷனரிகள் இந்த மிஷன் இயக்கத்தில் பணி செய்து ஆண்டவரை மகிமைப்படுத்தினர்.

#### இலண்டன் மிஷனரி சங்கம் - LMS

ஆங்கிலிக்கன், காங்கிரிகேஷனல், பிரஸ்பிட்டீரியன், மெத்தடிஸ்ட் ஆகிய புராட்டஸ்டண்ட் கிறிஸ்தவத்தை சார்ந்தவர்களால் 1795 இல் இந்த மிஷன் இயக்கம் தொடங்கப்பட்டது. காலப்போக்கில் காங்கிரிகேஷனல் பிரிவினர் ஆளுகையில் இந்த மிஷன் வந்தது.

தென் திருவாங்கூர் எனும் தற்கால கன்னியாகுமரி, திருவனந்தபுரம் மாவட்டத்தில் பெருமளவில் இந்த மிஷன் இயக்கம் 1804 முதல் பணி செய்தது. ரிங்கல்தௌபே, மீட், மால்ட், ஜேம்ஸ் ரசல், ஜான் காக்ஸ் ஹாக்கர் உட்பட பல முக்கியமான மிஷனரிகள் இந்த மிஷன் இயக்கம் மூலம் சிறப்பான பணியை தென் தமிழகத்தில் செய்தனர்.

#### சர்ச் மிஷனரி சங்கம் - C.M.S

1799இல் 16 ஆங்கிலிக்கன் குருமார்கள் ஒன்பது ஆங்கிலிக்கன் சபை அங்கத்தினர்கள் ஒன்று கூடி இந்த மிஷனரி சங்கத்தை தொடங்கினர். ஆங்கிலிகனில் சடங்காச்சாரங்கள் அற்ற சுத்தாங்க சுவிசேஷத்தை விரும்பிய - Low Order (தாழ்நிலையினர்) எனப்பட்டோர் இந்த மிஷன் இயக்கத்தை ஆதரித்தனர் இச்சங்கத்தின் ஊழியர்களாக 1814 இல் ரேனியஸ், ஷ்னார் ஆகிய ஜெர்மனியைச் சார்ந்த இரு லுத்தரன் பிரிவு கிறிஸ்தவ மிஷனரிகள் தமிழ் நாட்டிற்கு 1814 இல் அனுப்பப்பட்டனர். இதில் ரேனியஸ் ஐயரவர்கள் மூலம் 1820 இல் தென்தமிழகத்தில் பாளையங்கோட்டையைத் தலைமையிடமாகக் கொண்டு இந்த மிஷன் சங்கம் தனது பணிகளை தொடங்கியது. ரேனியஸ் ஐயரவர்கள் மூலம் சுமார் 371 திருச்சபைகளும் 150 பள்ளிகளும் நிறுவப்பட்டன. ரேனியஸ், பெற்றிட், ஜான் தாமஸ், சார்ஜென்ட், ஜான் தேவசகாயம், முல்லர் சாஃப்டர், டக்கர், ராக்லண்ட், பேரன்புரூக், தாமஸ் உவாக்கர், E.S.கார், உட்பட

பல மிஷனரிகள் நற்செய்தி, கல்வி, சமூகப்பணிகளால் பன்முகப் பங்களிப்பை தந்தனர்.

**அமெரிக்கன் மதுரை மிஷன்**

அமெரிக்கன் போர்டு அயல்நாட்டு மிஷன் சார்பாக மதுரையை தலைமையிடமாகக் கொண்டு அமெரிக்கன் மிஷன் பணி 1834 இல் தொடங்கப்பட்டது. அருள்திரு வில்லியம் டாட் அவருடைய மனைவி லூசி டாட் ஆகிய இருவரும் இதன் ஊழியர்களாக 1834 ஜீலையில் மதுரை வந்து சேர்ந்தனர். 1835 இல் அமெரிக்கன் சிலோன் மிஷனில் பணி செய்த தானியேல் புவர் தம்பதியரும், 2 மிஷனரிமார்களும், 8 தமிழ் ஆசிரியர்களும் அமெரிக்கன் மதுரை மிஷன் பணி செய்த மதுரைக்கு வந்தடைந்தனர் 100 பள்ளிகள் தொடங்கப்பட்டது.

**ஆங்கிலிக்கன் மிஷன் இயக்கங்களின் பன்முக பங்களிப்புகள்**

- அனுதினமும் காலை மாலை ஆராதனை தேவாலயங்களில் நடத்தப்பட்டது, ஆராதனைகளில் வேதபாடம் வாசிக்கப்பட்டு வாசிக்கப்பட்ட வேதபாடத்தில் இருந்து அருளுரையாற்றப்பட்டது. ஆசிரியர் பணியுடன் கூடிய சபை ஊழியர் முறை நடைமுறைப்படுத்தப்பட்டது.
- கிராமங்கள் தோறும் பள்ளிக்கூடங்கள் தொடங்கப்பட்டன. மிஷன் தலைமை இடங்களில் மருத்துவமனைகள் ஆசிரியர் பயிற்சி பள்ளிகள் நிறுவப்பட்டன. மருத்துவமனைகளில் மிகமிகக் குறைந்த செலவில் உயர்தர சிகிச்சை வழங்கப்பட்டது.
- மிஷன் கிராமங்கள் (CMS), மிஷன் காம்பவுண்ட்கள் (LMS) ஒடுக்கப்பட்ட சபையாருக்காக நிறுவப்பட்டன. அதில் கல்வி கற்க பள்ளிக்கூடம், குடிநீருக்காக கிணறு அமைக்கப்பட்டது.
- அனுதினமும் சமையல் செய்யும்போது எடுக்கப்படும் அரிசியில் பிடி அரிசியை சேகரித்து அதை ஓய்வு நாள் தோறும் தேவாலயத்தில் சென்று படைக்கிற காரியம் நடைமுறைப்படுத்தப்பட்டது.
- சபை ஊழியருக்கென மாதாந்திர கூட்டங்கள் நடத்தப்பட்டு ஊழிய வளர்ச்சிக்கான ஆலோசனைகள் வழங்கப்பட்டது.
- பணி செய்கிற மிஷன் சங்கத்துக்கு உதவும் படியாக ஆண்டுதோறும் சங்கக் காணிக்கை படைக்கும் முறை நடைமுறைப்படுத்தப்பட்டது.
- ஆண்டுக்கு ஒருமுறை ஒரு நாள் வருமானக் கவர் காணிக்கை படைக்கும் முறை நடைமுறைப்படுத்தப்பட்டது.
- தேவாலயத்துக்கு ஆகும் செலவுகளை தேவாலயம் சார்ந்த சபையாரே பொறுப்பேற்றுக் கொள்ளும் வண்ணம் ஆலய பரிபாலன நிதி என்ற LCF முறை நடைமுறைப்படுத்தப்பட்டது.
- ஆசிரியர்கள் மற்றும் சபை ஊழியர் பயிற்சி பள்ளிகளில் சாதி வேறுபாடுகளை கடைபிடிக்க மாட்டோம் என நிபந்தனை வைக்கப்பட்டு அந்த உறுதிமொழியை ஏற்றவர்கள் மட்டுமே சேர்த்துக் கொள்ளப்பட்டனர்.

**J.ஜான் ஞான ராஜ்**
**கல்லிடைக்குறிச்சி**

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்
அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

(வரலாற்று நெடுந்தொடர்-5)

## அவர் இங்கே இருந்திருந்தால்!

பிரதாப்சிங் இப்பொழுது அனுபவம் பெற்ற அரசராக விளங்கினார். ஆனால் பல இடைஞ்சல்களும் தொல்லைகளும் இருந்து வந்தன. அரியணைக்கு உரிமை கொண்டாடிக் கொண்டு போலியாக ஒருவன் இருந்தான். அவன் இருமுறை தற்காலிகமாக சிம்மாசனத்தில் அமரவும் செய்திருந்தான். சமீபத்தில் ஆங்கிலேயர் அவனை ஆதரித்திருந்தனர். இரண்டு நவாபுகள் ஒருவருக்கொருவர் நாய்களைப் போல் போட்டியிட்டுக்கொண்டு தஞ்சாவூரை எலும்பாகக் கௌவக் காத்துக் கிடந்தனர். வெற்றி பெற்றவன் நிச்சயம் தஞ்சையை நொறுக்கி விழுங்கிவிடுவான். பெரிய மறவரும் சின்ன மறவரும் எப்பொழுது தஞ்சையரசின் நிலவுடைமைகளைக் கவரலாம் என்று சமயம் பார்த்துக்கொண்டே இருந்தார்கள்.

பிரெஞ்சியரும் ஆங்கிலேயரும் சதா தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டு அந்தச் சண்டையில் பிரதாப்சிங்கை எப்படி இழுக்கலாமென்று திட்டம் வகுத்துக் கொண்டிருந்தார்கள். பிரதாப்சிங்கிற்கு எப்போதும் யாரையாவது சார்ந்திருக்க வேண்டும். இத்தனை தொல்லைகளுக்கிடையே முசநாட்டில் தன் அரசு ஆடிக்கொண்டிருப்பதைக் கண்டதும் குடிமக்களின் நல்லெண்ணத்தையும் ஆதரவையும் தேடத் தொடங்கினார். வரிச் சுமையைக் குறைத்தார். பண்டிதராவின் திடீர் மறைவுக்குப் பிறகு அமைச்சர்கள் பதவி வேட்டைக்காகக் குத்துப்பிடி போட்டார்கள். சேனாபதி மங்கோஜி தந்திரமும் பேராசையும் கொண்டவர். எளிதில் அரசரின் அபிமானத்தைப் பெற்று விட்டார். இக்கட்டு வேளையில் வீரமறவரை முறியடித்து விரட்டியது அவருக்குச் சாதகமாக இருந்தது. பழைய மந்திரியின் சுயநலத்தாலும் முட்டாள் தனத்தாலும் தான் அது நேர்ந்தது என்று அடிக்கடி சொல்வார். ஆனால் பண்டிதராவுக்கு அரசரிடம் இருந்த செல்வாக்கு இவருக்கு ஒருநாளும் ஏற்படவில்லை. அவருடைய நற்பெயரைக் கெடுப்பதற்கு ஏதாவது சொல்லிக்கொண்டேயிருப்பார். வஞ்சகமாக, பேசிப் புகழ்வது போல் அவரை இகழ்வார். சில வேளைகளில் வெளிப்படையாகவே குற்றஞ் சாட்டுவார். மற்ற மந்திரிகளும் இந்த ஆண்மையற்ற விளையாட்டில் அவருடன் கலந்து கொள்வார்கள். மங்கோஜிக்கு இரண்டு பலம்வாய்ந்த எதிரிகள் இருந்தார்கள். திவான் ராமண்ணா பண்டிதரும், அவர் தம்பி அந்தரங்க அமைச்சர் வெங்கண்ணா பண்டிதரும் தான் அவர்கள். சேனாபதியைவிட இவர்களுக்கு அரசரோடு தொடர்பு அதிகம். தவிர சேனாபதி சேனையோடு அடிக்கடி வெளியூர் போய்விட வேண்டியிருக்கும்.

அன்றைய சோதிடர்களில் சிறந்தவர் என்று திவான் பெயர் பெற்றிருந்தார். அரசருக்கு அவர் சொல்லிய சோதிடங்களும் சில பலித்திருந்தமையால் அவருக்கு அவர் மீது சற்று அபிமானம் ஏற்பட்டிருந்தது. தம்பி அமாத்யாவோ அதிகம் பேசமாட்டார். பேராசை அதிகம். சூது உண்டு. கொள்கை அற்றவர். பண்டிதராவ் கூட இவரைப் பலம் வாய்ந்த எதிரியாகவே கருதி வந்தார். பண்டிதராவிடம் கொண்டிருந்த பயபக்தியும் வாஞ்சையும் அரசருக்கு இவர்களிடம் கிடையாது. அனுபவமும் தன்னம்பிக்கையும் சிறிது வளர வளர தாமாகவே செயல்படவும் தொடங்கினார்.

அன்று அரசரும் அமைச்சர்களும் நாயக்கர் தர்பார் மண்டபத்தில் கூடியிருந்தனர். வரலாற்றுப் புகழ்பெற்ற ஆற்காடு நவாபுரிமைச் சண்டையில் தஞ்சை என்ன பங்கெடுக்க வேண்டுமென்று பேச்சு நடந்தது.

'ஆங்கிலேயரை விடப் பிரெஞ்சியர் தான் நமக்கு மிக அருகில் இருக்கின்றனர். அதனால் நன்மையோ தீமையோ அவர்களால் தான் அதிகம் உண்டு. அதுவுமில்லாமல் டூப்ளேக்கு இணையாக ஆங்கிலேயரிடம் அரசியல்வாதியோ தளபதியோ இல்லை' என்றார் பிரதம மந்திரி.

'டூப்ளேயின் போர்த்திறமையைப் பற்றி எனக்குச் சந்தேகமாகவே இருக்கிறது. மேஜர் லாரன்ஸும் ஒன்றும் இளைத்தவரல்ல. மேலும் தேவிகோட்டையில் ஆங்கிலப்படையில் ஒரு துடுக்குக்கார சூரனைக் கண்டேன். அவன் பெயர் கிளைவ் என்று நினைக்கிறேன். அவன் சீக்கிரமே லாரென்ஸை மிஞ்சி விடுவான். பத்து டூப்ளேக்களையும் விழுங்கி ஏப்பம் விட்டு விடுவான். ஆனால் துடுக்குத்தனமாய் ஏதாவது செய்து சண்டையில் செத்து வைக்காமலிருக்க வேண்டும்! எனக் கென்னவோ ஆங்கிலேயர் மேல் நம்பிக்கை இருக்கிறது. உறுதி வாய்ந்தவர்கள்' என்றார் சேனாபதி.

'தேவிகோட்டை சம்பவத்திற்குப் பிறகுமா இப்படிச் சொல்லுகிறீர்கள்?' என்று சற்றுக் காட்டமாகக் கேட்டார் அரசர்.

'ஆங்கிலேயர் நம்பிக்கைத் துரோகம் செய்கிறார்கள். நம்மிடம் நட்பு பூண்டிருப்பதாகப் பலமுறை உறுதி அளித்து விட்டு, அந்தப் போலியைக் காட்டிலிருந்து கொண்டு வந்து என்னை விரட்டிவிட்டு அவனை அரசனாக்கப் பார்த்தார்களே?"

'ஆங்கிலேயர் யாரையும் எளிதில் நம்பி விடுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். சாயாஜியின் பொய்க் கூற்றுக்களை நம்பி விட்டார்கள்' என்றார் மங்கோஜி.

'அப்படியானால் தேவிகோட்டையை நமக்குத் திருப்பித் தந்துவிடுவதற்கென்ன?' என்று கேட்டார் அரசரின் பின்னால் நின்று கொண்டிருந்த அமாத்யா.

சேனாபதி பதில் சொல்ல முடியாமல் தவித்தார். சிறிது நேரம் கழித்து, 'முதலாவது சாயாஜிக்காக அதை நம்மிடமிருந்து எடுத்துக்கொண்டார்கள். இப்பொழுது சாயாஜிக்கு உதவி செய்யாமலிருப்பதற்குப் பரிசாக அதை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். கொள்ளிடத்தின் முகத்துவாரத்தில் இருக்கும் மண்திடலை அகற்றி விட்டு தங்கள் கப்பல்கள் வந்து இறங்க அதைத் துறைமுகமாக்கிக் கொள்ளலாம் என்று நினைக்கிறார்கள். அவர்கள் நாடு ஒரு தீவு. அவர்கள் பலம் அவர்கள் கப்பல் படைதான். பிரெஞ்சியருக்கு அருகில் அப்படியொரு தளம் அவசியம் என்று கருதுகிறார்கள்' என்றார்.

அரசர் வருத்தத்துடன், 'சந்தாசாகிப் நம்மை ஏமாற்றி வாங்கிக்கொண்ட வாக்குறுதிப் பத்திரம் தான் எனக்கு மிகுந்த கவலையைத் தருகிறது. சில நாள் கடத்தியிருந்தால் இதைத் தவிர்த்திருக்கலாம். சில வேளைகளில் அதில் கையெழுத்திட்ட கையை வெட்டி எறிந்துவிடலாமா என்று கூடத் தோன்றுகிறது. முன்பின் யோசிக்காமல் இரவில் வேதியன் வீட்டுக் கதவைத் தட்டிவிட்டு, பின் வருந்தி கையை வெட்டிக் கொண்ட பாண்டிய மன்னன் செய்த குற்றத்தைவிட நான் செய்த தவறு பெரிது. உங்களுள் யாராலும் அதைத் தடுக்க முடியாமல் போயிற்றே' என்றார் மனக் கசப்புடன்.

'பார்க்கப்போனால் ஒரு துண்டுக் கடுதாசிதானே' என்றார் திவான். சேனாபதி, 'பலவந்தமாக வாங்கிய வாக்குறுதி செல்லாது. மேலும் பணம் கட்ட வேண்டிய வேளையில் அதைப்பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டால் போதும்' என்றார்.

'ஆனால் சந்தாசாகிப் நவாபாகி விட்டால் அவன் உடனடியாகப் பணம் கேட்பான்' என்றார் அரசர் வருத்தமாக.

'அதனால் தான் நான் சொல்லுகிறேன். நாம் இப்பொழுது பிரெஞ்சியரோடு சேர்ந்துகொண்டால், அந்தப் பத்திரத்தை ரத்துச் செய்யும் படி அவர்கள் நமக்காக அவனிடம் பேசலாம்.'

'நானும் அதே நோக்கத்தோடு தான் ஆங்கிலேயருடன் சேரும்படி சொல்லுகிறேன். ஆங்கிலேயரோடு சேர்ந்து உரிமைக்கார நவாபை ஆதரித்தால் சந்தாசாகிப் பத்திரத்தைப் பயன்படுத்தும் அவசியமே எழாது.'

'உரிமைக்கார நவாப்தான் எப்படியும் கடைசியில் நவாபாவான்' என்றார் அமாத்யா ஓரப்பார்வையுடன்.

'சண்டையில் யாருக்கு வெற்றி கிடைக்கிறதோ இப்பொழுது ஒன்றும் சொல்ல முடியாது. வெற்றியடைந்தவன் தான் நவாபாவான். ஆனால் பிரெஞ்சியரோடு சேர்ந்து சந்தா சாகிப்பை ஆதரித்தால் பத்திரத்தை ரத்துச் செய்யும்படி துணிந்து கேட்கலாம். குறைந்தபட்சம் தொகையையாவது குறைக்கச் சொல்லலாம். தேவிகோட்டையில் ஆங்கிலேயர் நமக்குத் துரோகம் செய்துவிட்டால், இப்பொழுது நாம் பிரெஞ்சியரோடு சேர்வதற்காக அவர்களும் நம்மைக் குற்றஞ் சொல்ல முடியாது' என்றார் பிரதம மந்திரி.

'நமது ஜோஸியர் திவான் என்ன சொல்லுகிறாயா ஆற்காட்டு நவாபாவான்?' என்று அரசர் ராமண்ணா பண்டிதரைப் பார்த்துக் கேட்டார்.

'நூற்றுக்குக் கீழே ஒரு எண் சொல்லுங்கள்'

'ஐம்பத்தி ஒன்று.'

'திவான் வாய்க்குள்ளேயே கணக்குப் போட்டார். மற்றவர்கள் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். பின் இந்த ஆண்டு முடிவதற்குள் ஆற்காட்டு நவாப் கெட்ட மரணம் அடைவான்' என்றார். எதிர்பாராத இந்தப் பதிலால் எல்லோரும் ஆச்சரியம் அடைந்தார்கள்.

அரசர் சிறிது நேரம் கழித்து, இப்பொழுது இரண்டு பேர் கர்நாடகத்துக்கு நவாபுரிமை கொண்டாடுகிறார்கள். அதில் இறந்து போவது யார் என்று தெரிந்தாலல்லவா நல்லது' என்றார்.

'அவர்கள் ஜாதகத்தைப் பார்த்தால் அன்றி அதைச் சொல்ல முடியாது' என்றார் திவான். எல்லோரும் சிரித்தார்கள்.

'பண்டிதராவ் மாத்திரம் இப்பொழுது இங்கே இருந்திருந்தால் சந்தாசாகிப் இப்படியொரு பத்திரத்தை நம்மிடமிருந்து வாங்கியிருக்க முடியாது' என்றார் அரசன்.

'அவருக்கு பரங்கிகளையே பிடிக்காது. யாருடனும் சேராமல் நடுநிலையை அனுசரிக்கச் சொல்லிருப்பார் என்று நினைக்கிறேன்' என்றார் பிரதம மந்திரி.

'பிரெஞ்சியர் நமது சமயத்தை வெறுக்கிறார்கள். அதனால் ஆங்கிலேயரே பரவாயில்லை என்பது தான் அவர் கருத்து. அந்த ஒரு விஷயத்தில் எங்கள் இருவருக்கும் ஒற்றுமை இருந்தது' என்று சொல்லிச் சிரித்தார் மங்கோஜி.

'நாம் இன்னும் சிறிது காலம் நடுநிலைமையே அனுசரித்து வரவேண்டும். கட்சிக்காரர்கள் அவர்களுக்குள் சண்டையிட்டுத் தீர்த்துக் கொள்ளட்டும். ஆனால் நாமும் சண்டையில் சேரத் தயாராக இருப்பது போல இரண்டு கட்சியினரும் நினைக்க வேண்டும். தங்கள் கட்சியில் தான் நாம் சேரப் போவதாகவும் அவர்கள் நினைத்துக்கொண்டிருக்க வேண்டும்' என்றார் அரசர். பிரதானரை அதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்யச் சொல்லிவிட்டு அரசர் எழுந்தார். மற்றவர்களும் எழுந்து மேடையினின்று இறங்கினர்.

## சிறிய தோட்டக்காரி

'இப்படியும் ஒரு பிள்ளை குறும்புபண்ணுமா?' என்று சொல்லிக்கொண்டே சூத்திரப் பணிப்பெண் சாரதா முகத்தைச் சுளித்துக்கொண்டாள். 'இப்பத்தான் துளசிப்பாத்திக்குத் தண்ணி பாய்ச்சியிருக்கேன்; இது அதுக்குள்ளேயும் வரப்பை வெட்டித் தண்ணியை வெளியேவிடுது' என்றாள்.

'தண்ணி அவ்வளவையும் வெளியே விடலை, சாரதா! என் ரோஜாச் செடிக்குக் கொஞ்சம் தண்ணி அதுலேந்து பாய்ச்சிருக்கேன்' என்று சொல்லிக்கொண்டே ஓர் ஐந்து வயதுப் பெண் குழந்தை தொடர்ந்து நீர்பாய்ச்சும் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

'அடி என் ராசாத்தி! நான் தான் உன் ரோஜாச் செடிக்குக் காலையிலேயே தண்ணி ஊத்திட்டேனே. நீ வேறே பாய்ச்சி அதை முழுகடிச்சிராதே' என்றாள். 'நீ, சரியா ஊத்தலை. அது வாடிக்கிடக்கு, பாரு' என்றாள் அந்தச் சிறுபெண்.

பெரிய தோட்டக்காரிதான் போ. எங்கப்பாவை விட உனக்கு ரோஜா



வளப்பைப்பத்தித் தெரியுமோ? இரு, உங்க மாமிகிட்டேச் சொல்றேன். செடிக்குத் தண்ணி ஊத்தும் போது உன்னைத் தோட்டத்துக்குள்ளே விடப்படாதுன்னு சொல்லிவைக்கணும், துளசிப் பாத்தியைக் கிண்டிக் கிண்டிப் போட்டிருக்கியா, மாமி பாத்தா சண்டைக்கு வரப்போறா' என்றாள் சாரதா.

'மாமியை வேணா அழைச்சுண்டு வா, நான் ஒண்ணும் அவகசிப் பாத்தியை கிண்டிப் போடலை' என்றாள் குழந்தை. அம்மம்மா, பிடிவாதம் பிடிச்சது; யாருக்கும் பயப்படாது' என்று செல்லமாகக் கடிந்துகொண்டே குழந்தையை வாஞ்சையுடன் பார்த்தாள். பின் வெறுங்குடத்தைத் தரையில் வைத்து விட்டு குழந்தையைத் தூக்கியணைத்து முத்தமிட்டாள். குழந்தை கால்களை உதைத்துப் பிடியிலிருந்து திமிறிக் கீழே றெங்கிவிட்டாள். சாரதா தன் சேலையைப் பார்த்துவிட்டு, 'சை, உன் சகதிக் காலாலே என் சேலையை நாசமாக்கிப்பிட்டியே. நான் உனக்கு முத்தங் கொடுத்ததுக்கு நீ இப்படிப் பதில் செஞ்சிருக்கியே' என்றாள்.

'நான் வேலை செய்யறப்போ உன்னை யார் என்னைத் தூக்கச் சொன்னா?' என்று குழந்தை குறும்புத்தனமாய்ச் சொல்லி விட்டுத் தன் நீர்ப்பாசன வேலையில் ஈடுபடலானாள். 'இவ அம்மா இவவயசிலே இப்படியேதான் செய்வா. இந்தச் சின்ன ராசாத்தி செய்யற குறும்பைப் பாக்கப் பெரிய எசமான் கிட்ட இல்லையே! இதையெல்லாம் பாத்தா எப்படிச் சந்தோசப்படுவாரு. பாவம் பெரிய எசமான் இருக்காரோ அல்லது செத்துப் போயிட்டாரோ!' என்று தனக்குள்ளாகவே சாரதா சொல்லிக்கொண்டாள்.

இவள் பேசுவதைக் கேட்டுக்கொண்டே ஒரு வயதான பெண் தோட்டத்துக்குள் வந்தாள். உயிரோடே இருந்தாலும் இருப்பாரு. ஆனா நம்ம வரைக்கும் போயிட்ட மாதிரி தான். அஞ்சு வருஷத்துக்கு மேலேயே ஆச்சு அவர் மறைஞ்சு. ஆமா! இன்னிக்கு என்ன திடீர்னு அவரை நினைச்சுக்கிட்டே? என்று கேட்டாள் அவள்.

சின்னம்மா தோட்டத்திலே விளையாடறதைப் பாத்தா அவ அம்மா நினைவு வந்துட்டுது. பெரிய எசமான் இதைப் பாத்தா எவ்வளவு சந்தோசப்படுவாருன்னும் நினைச்சிக்கிட்டேன். பாயீ, மாமி வந்திருக்கா இங்கே வா' என்று கூப்பிட்டாள்.

சிறுமி ஈரமண்ணில் விளையாடியிருப்பதைக் கவனித்த மாமி, 'சாரதா, இவள் உடம்பும், துணியும் அழுக்கா இருக்கு. கழுவி விடு. துணியையும் மாத்து' என்று உத்தரவிட்டாள். செடிக்குத் தண்ணி ஊத்தியாச்சு, இதோ வாறேன்' என்றவள் சிறுமியைப் பார்த்து உன்னைத் திரும்பவும் குளிப்பாட்ட வேண்டியது தான்; சளிபிடிக்கப் போவுது' என்றாள்.

சிறுமி குதிபோட்டுக்கொண்டே, 'எனக்குக் குளிக்க ரொம்பப் பிடிக்கும்; சளி ஒண்ணும் பிடிகாது' என்றாள். மாமியைப் பார்த்து. மாமீ. உங்க துளசிப் பாத்தியிலேந்து என் ரோஜாச் செடிக்கு வாய்க்கால் வெட்டியிருக்கேன் பாருங்கோ' என்றாள்.

'அட! நல்லா இருக்கே. பெரிய அணைக்கட்டு கட்டின சோழன் தோத்துப்போவான் போலிருக்கே! ஆனா உன் துணி யெல்லாம் அழுக்காப் போச்சு பாரு: உனக்கு என்ன வேணுமோ அதை சாரதாகிட்டே சொன்னாத்தான் அவா செஞ்சு தருவாளே!'

'சாரதா எனக்குச் செஞ்சுதர வேண்டாம். நானே என் செடிக்குத் தண்ணி ஊத்தினால் தான் நெறையப் பூக்கும்' என்று குழந்தை உறுதியாகச் சொன்னது.



'இத்துனூண்டு இருந்தாலும் அவ நெனச்சதை செஞ்சு முடிச்சுடுவா, குடும்பத்துக் குணம் அது. விரையொன்று போட்டால் சுரையொன்று முளைக்குமோ? எனக்கு இது பிடிக்கும், இது பிடிக்காதுன்னு சொல்லிடவேண்டியது. மத்தவா அதை அனுசரிச்சு நடந்துக்கணும்' என்றாள் மாமி.

அப்பொழுது தோட்டத்தைச் சுற்றியிருந்த தாழ்ந்த மண் சுவருக்கு மேல் இரண்டு பேர் எட்டிப் பார்த்துக்கொண்டிருந்ததை மாமி கவனித்தாள். அதில் ஒன்று ஹவில்தார் ரகோஜி, அடுத்தவர் சந்நியாசியைப் போல் காவியுடை அணிந்திருந்தார். அவரைப் பார்த்தால் பழக்கமானவர் போல் தோன்றிற்று. ஹவில்தாரைப் பார்த்தவுடன் மாமி, 'ராகோஜியா? இராக்காவலுக்கு இன்னிக்குச் சீக்கிரமே வந்துட்டியே' என்றாள்.

ஒரு நாளுமில்லாத குதூகலமான குரலில் ரகோஜி, 'உங்களுக்கு ஒரு விருந்தாளி கொணந்திருக்கேன். ஒரு சந்நியாசி நம்ம ஊருக்கு இப்ப வந்திருக்கார். உங்களையும் பாயியையும் பார்க்க அவரை அழைச்சிட்டு வந்திருக்கேன்.' அவர் இடது கண்ணில் குறும்பு நெளிந்தது. 'தெரியுது' என்றாள் மாமி சற்றுக் கண்டிப்புடன். சாமியாரை முன் வாசல் வழியாக இந்தக் குடிசைக்குள் அழைச்சுண்டு வரக்கூடாதா? கதவு திறந்து தான் இருக்கு. முன் வழியாய் கூட்டிக்கொண்டு வா' என்றாள்.

சிறுமி இன்னும் ரோஜாச் செடியைத் தான் கவனித்துக் கொண்டிருந்தாள். மாமியும் ஹவில்தாரும் பேசிக்கொண்டிருக்கையில் கிழச்சந்நியாசி அஸ்தமன சூரியனின் கதிர்கள் முகத்தில் விழா வண்ணம் கையைக் கண்களுக்கு மேல் வைத்து மறைத்தபடி அந்தக் குழந்தையையே வாஞ்சையுடன் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார். அவர் முகத்தில் குழந்தைப் புன்முறுவல் ஒன்று தவழ்ந்தது. தோட்ட வேலை செய்யும் குழந்தையை ஒரே முகமாய்ப் பார்த்ததால் மாமியையோ அவள் ரகோஜியுடன் பேசியதையோ கவனிக்கவேயில்லை.

பணிப்பெண் சாரதாவும் அந்த அந்நியனை ஏறிட்டுப்பார்த்தாள். மாமியை விட அவளுக்குக் கண்கள் கூர்மை. சிறிது சிறிதாக அவள் முகத்தில் வியப்புப் படர்ந்தது. தண்ணீர்க் குடத்தைக் கீழே இறக்கிவிட்டு பெரிய எசமானில்லா வந்திருக்காரு!' என்று கூவினாள். 'அவரே தான்' என்றார் ரகோஜி.

## மஹமதுவும் மலையும்

மணம்புச்சாவடியிலிருந்த இந்த வீட்டுக்கருகில் தான் ஹவில்தாரின் வீடும் இருந்தது. வல்லத்தைவிட்டுத் தஞ்சைக்கு வந்த பின் இங்கு தான் குடியிருந்து வந்தார்கள். மாலை நேரங்களில் தம் வீட்டில் பேரக் குழந்தைகளோடு விளையாடிக் கொண்டிருப்பார். ஒரு நாள் மாலை கண்ணாமூச்சி விளையாடுகையில் அவர் பேத்தி காவேரி அவர் கண்களை இறுகக் கட்டிவிட்டாள். அவர் கத்திக்கொண்டே கட்டைத் தளர்த்திப் பார்க்க முயன்றார். அதற்குள் யாரோ தெரு வாசலில் நின்றுகொண்டு 'ராகவா' என்று கூப்பிட்டது கேட்டது. அவருக்குப் பழக்கமானவர்களும் நண்பர்களும் கூட அவரை ரகோஜி அல்லது ஹவில்தார்ஜி என்று தான் அழைப்பார்கள். ராகவா என்று அழைக்கக் கூடியவர்கள் வெகு சிலரே இருந்தார்கள். அவசரமாகத் துணியை உதறிவிட்டுக் கண்ணைக் கசக்கிக் கொண்டு வெளியே பார்த்தார். வாசலில் ஒரு கிழச்சந்நியாசி நின்றுகொண்டு

வெளியே வருமாறு சைகைகாட்டியதைக் கண்டார். இயந்திரம் போல் வெளியே வந்தார் ரகோஜி. வெளியே வந்தவுடன் ஆச்சரியத்தில் திகைத்து நின்றார். பூர்வாசிரமத்தில் பண்டிதராவாக இருந்த சந்நியாசி நாம் இனி அவரை சந்நியாசி என்றே அழைக்கலாம் - முதலாவது வல்லத்துக்குப் போயிருந்தார். அங்கு அவர் குடும்பத்தினரைக் காணாமல், நேரே தஞ்சையி பெருங்க ஹவில்தாரின் வீட்டுக்கு வந்திருந்தார். ரகோஜிக்குத் நமது வியப்பைத் தெரிவிப்பதற்குக் கூட அவகாசம் கிடைக்கவில்லை. சந்நியாசி கேள்வி மேல் கேள்விகேட்டுத் துளைத்தார். ஐந்து வருடங்களில் குடும்பத்தில் நடந்த சங்கதிகளை சில நிமிடங்களுக்குள் சொல்ல வேண்டியிருந்தது. குழந்தையைப் பற்றிப் பேச்சு வந்தவுடன் தன்னை உடனே தோட்ட வீட்டுக்கு அழைத்துச் செல்லுமாறு சந்நியாசி கட்டளையிட்டார். ரகோஹி தலைப்பாகையை எடுத்து வருவதற்காக வீட்டுக்குள் ஓடினார். அவர் மகன் ரகுநாத் இரவு அரண்மனைக் காவலுக்குப் போவதற்கு முன் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவனிடம் பண்டிதராவ் திரும்ப வந்திருப்பதாகவும் அவர் இப்பொழுது சந்நியாசியாக இருப்பதாகவும் அரசரிடமும் அமாத்யாவிடமும் சொல்லிவிடும்படியாகச் சொன்னார். அதன்பின் இரண்டு கிழவர்களும் தோட்ட வீட்டை அடைந்தார்கள்.

தோட்ட வீட்டில் சந்நியாசியை ஆனந்தக் களிப்புடன் வரவேற்றார்கள். சிறிது நேரம் கழித்து சந்நியாசி, தாம் வந்திருப்பதைத் தமது அனுமதியில்லாமல் யாரிடமும் தெரிவிக்க வேண்டாம் என்று ஹவில்தாரிடம் கூறினார். உடனே ஹவில்தார் திடுக்கிட்டவராய் அறியாமையினாலும் ஆனந்தத்தினாலும் தான் ஏற்கனவே அதைச் சொல்லி விட்டதைத் தெரிவித்தார். இனி ஒன்றுஞ்செய்ய இயலாது என்பதை சந்நியாசியும் உணர்ந்தார்.

சுமார் ஒரு மணி நேரத்தில் அமாத்யா தோட்ட வீட்டுக்கு வந்து விட்டார். அரசர் தமது அன்பிற்குகந்த குருவுக்கு வாழ்த்துக்கள் அனுப்பியிருப்பதாகவும் அரண்மனைக்கு அழைத்து வரச்சொன்னதாகவும் தெரிவித்தார். சமீபத்தில் நடந்திருந்த அரசியல் நிகழ்ச்சிகளைப் பற்றி சந்நியாசி அமாத்யாவிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார். இந்த இக்கட்டான வேளையில் அரசர் தமது குருவின் ஆலோசனையை மிகவும் விரும்புவதாகவும் அமாத்யா சொன்னார். அரசரின் அன்பை உணர்ந்த சந்நியாசி மகிழ்ச்சியடைந்த போதிலும் அவரின் அழைப்புக்கு உடன்படவில்லை. அரண்மனைக்கு வரவோ அரசியலில் கலந்துகொள்ளவோ இயலாது என்று உறுதியாகச் சொல்லிவிட்டார். தமது ஆசிகளையும் வாழ்த்துக்களையும் அரசருக்குத் தெரிவிக்கச் சொன்னார். அவருக்காகவே அனுப்பிருந்த அலங்காரமான தந்தப் பல்லக்கு வெறுமையாகத் திரும்பிற்று.

அன்று நள்ளிரவில் வீட்டில் எல்லோரும் தூங்கிக்கொண்டிருந்தார்கள். சந்நியாசி தோட்டத்தில் நிலாவொளியில் ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்து அருகே தரையில் உட்கார்ந்திருந்த ஹவில்தாரோடு அளவளாவிக் கொண்டிருந்தார். யாரோ வெளிக் கதவைத் தட்டினார்கள். இந்த வேளையில் வருவது யாராக இருக்கலாம் என்று யோசித்த வண்ணம் சென்று அடிதண்டாவை நீக்கினார் ரகோஜி. அவர் மகன் ரகுநாத் அரண்மனையிலிருந்து வந்திருந்தான். மகாராஜா குருவைக் கண்டு செல்ல நேரில் வந்துகொண்டிருப்பதாகவும் அதை அறிவிக்கத் தன்னை முன்கூட்டி அனுப்பியதாகவும் சொன்னான். அரசருடைய அன்பைக் கண்டு நெகிழ்ந்தார் சந்நியாசி. அதற்குள்ளாகவே அரண்மனை பல்லக்குத் தூக்கிகளின் பாட்டு தொலைவில் கேட்டது. வீட்டை நெருங்கியதும் அரசர் உத்தரவுப்படி பல்லக்குத் தூக்கிகள் பாட்டை நிறுத்தி விட்டார்கள். சில நிமிடங்களில் தஞ்சை மன்னர், மகாராஜா பிரதாப்சிங் அந்த எளிய தோட்டத்துக்குள் நுழைந்தார். ஹவில்தார் வழிகாட்டிச் சென்றார். அவருக்குப் பின்னால் நறுமண எண்ணெயில் எரிந்த வெள்ளி விளக்கைப் பிடித்த வேலையாள் நடந்தான். பின்னர் பூக்கள், பழங்கள், தித்திப்புப் பண்டங்கள் வைத்த பொற்தட்டைத் தாங்கிக் கொண்டு அமாத்யா வந்தார். அவருக்குப் பின்னால் மன்னர் பிரதாப்சிங்கும், கடைசியாக ரகுநாத்தும் வந்தார்கள். மற்றப் பரிவாரம் தெருவிலேயே தங்கி விட்டது. சந்நியாசி இருந்த இடத்தை அரசர் அடைந்ததும் அமாத்யா மங்கலத் தட்டை மகானின் எதிரில் வைத்தார்.

'துகோஜியின் மகனும், தங்கள் எளிய மாணவனுமான பிரதாப்சிங் தங்கள் தாமரைப் பாதங்களை வணங்குகிறான்' என்று சொல்லிக்கொண்டே வெறுந்தரையில் நெடுஞ்சாண கிடையாய் விழுந்து வணங்கினார். சந்நியாசி, தீர்க்காயுசும் வெற்றியும் உண்டாவதாக' என்று ஆசி அளித்தார்; பின் ஆசனத்தைக் காட்டி அமரச் சொன்னார். அவர் உட்கார்ந்து வெகுநேரம் கிழவரின் முகத்தையே பரிவுடன் நோக்கிக்கொண்டிருந்தார். சந்நியாசிதான் முதலாவது மௌனத்தைக் கலைத்தார். அரசரின் உடல் நலத்தையும் அவர் குடும்பத்தினரைப் பற்றியும் விசாரித்தார். நெடுங்காலமாகத் தவமிருந்த அரசிக்குப் பெண் குழந்தை பிறந்திருப்பதில் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்தார். பின் அமாத்யா ஏதோ சைகை காட்டவே வேலையாட்கள் சற்றுத் தொலைவுக்குப் போய்விட்டார்கள். மூவரும் தனியாக இருந்தனர். 'எல்லாம் உங்கள் கிருபை' என்றார் பிரதாப்சிங்.

'மகாதேவன் கிருபை என்று சொல்லு, பிரதாப். எல்லாம் அவன் சித்தம், அவன் திருவிளையாடல் அல்லவா? மனிதனால் என்ன ஆகும்?' சமீபத்திய நிகழ்ச்சிகளைப் பற்றி அமாத்யா விளக்கினார். நான் ஸ்ரீசைலக் காட்டில் இருந்தபொழுது ஒரு ஆங்கிலேயன் மூலமாகவும் அதைப்பற்றிக் கேள்விப்பட்டேன். நான் திரும்பி வந்தமைக்கு அதுவும் ஒரு காரணம் ஆகும்' என்றார் சந்நியாசி. இதைக் கேட்க எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது' என்றார் அரசர் ஆர்வத்துடன். தொடர்ந்து: குரு திரும்பி வந்திருக்கும் செய்தியை இன்று மாலை கேட்டதும், என் வேண்டுதலுக்கு இணங்கி பிரஹதீஸ்வரரே இந்த ஆபத்து வேளையில் அவரை அனுப்பியிருக்கிறார் என்று நினைத்துக்கொண்டேன்' என்றார்.

கேவலம் மனிதர் என்ன செய்துவிட முடியும்? ஆங்கிலேயன் மூலமாக எல்லாவற்றையும் அறிந்தேன். நான் உலகத்தைத் துறந்தவன் தான். என்றாலும் செய்தியைக் கேட்டதும் உனக்காகக் கவலைப்பட்டேன். இந்தத் தஞ்சையரசைப்பற்றிப் பெருங்கனவுகளும் ஆசைகளும் கொண்டிருந்தேன் என்பது உனக்குத் தெரியும். இதோ வீட்டினுள் தூங்குகிறாளே அந்தக் குழந்தையின் பாதுகாப்புக்காகவும் கவலைப்பட்டேன். முக்தாம்பாள் மீதும் முராரி மீதும் எத்தனை பற்று வைத்திருந்தேன். ஹூம், அவர்கள் நினைவாக இருப்பது இவள் ஒருத்திதானே. அவளைப் பார்க்க வேண்டு மென்ற ஆவலும் எழுந்தது. ஆனால் திரும்ப வேண்டும் என்ற எண்ணத்தைக் கட்டுப்படுத்த முயன்றேன். என் மனம் அமைதியை இழந்து சஞ்சலப்பட்டது.

**தொடரும் ...**

# உங்கள் வரலாற்று சங்கம்

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

**நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துவதில் மகிழ்ச்சி அடைகின்றோம்.**

பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். (உபாகமம் 32:7)

மோசே இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறும் போது **'பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்'** என்று கூறுகிறார். வரலாற்றின் பக்கங்களை நாம் திரும்பி பார்க்கும் போது, அநேக அனுபவங்களையும், பாடங்களையும் அவை நமக்கு கற்றுக் கொடுக்கின்றன.

பாதை தெரியாத நிலையில் இருக்கும் போது வரலாற்று சம்பவங்கள் நமக்கான பாதைகளை நமக்கு காட்டுகின்றன. (முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கிறது; இனி நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது. (பிரசங்கி 3:15))

ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் வரலாற்றை அதிக தியாகத்தோடும் அர்பணிப்போடும் தம் அடுத்த தலைமுறைக்கு மிகச் சிறந்த வழிகாட்டியாகவும் பொக்கிஷமாகவும் கொடுத்துள்ளனர். அதை போற்றுவதும் நம் அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் மேல் விழுந்த தலையாய கடமையாகும். அந்த அளப்பரிய பணியை செய்ய அர்பணிக்கப்பட்ட இயக்கங்களுள் **திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கமும்** ஒன்று.

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும்பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்று சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரி மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்ரா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான், பேதுரு, பவுல் ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தையும் இறைவன் பயன்படுத்தவதை எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

- தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக்கட்டுரைகளோடு மிக சிறப்பாக வெளி வந்து கொண்டிருக்கிறது. மறைக்கப்பட்ட, மறந்த, மறைந்த மிஷனரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1400 க்கு மேற்பட்ட வாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.
- காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர். அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் **ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்** நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் முதல் நூலகம் என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல்கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.
- வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றோம். குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் **'பரிசுத்தவாட்டிகள் பன்னிருவர்'** என்ற வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் மறுபதிப்பு செய்து

வெளியிடப்பட்டது. மேலும் தற்போது பத்துக்கும் மேற்பட்ட புத்தகங்களை மறுபதிப்பு செய்யும் பணிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.

- தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனரிகள் பணி செய்த இடங்கள், அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்தச் சாட்சிகளாக மரித்த மிஷனரிகள் பணி செய்த மற்றும் தங்களை இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் **Mission Tourist Map** என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.
- வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்று தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.
- கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.
- மிஷனரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.
- தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனரிகள் மற்றும் தன் சொந்த மக்களுக்காக தங்களையே அர்பணித்த நம் இந்திய மிஷனரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.
- வரலாற்று சங்கம் சார்பில் மிஷனரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.
- திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய **திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுல்லங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.


**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**

**கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,**

**பங்களாச் சுரண்டை-627859,**

**தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)**

**04633 290401**

Federal Bank

Tinnevelly Christian Historical Society

Account number : 17480200003684

IFSC Code : FDRL0001748

christianhistorical@gmail.com

**சந்தா விபரங்களுக்கு**

**91767 80001**




WWW.
tchsportal.co.in



ஆ. சிவசுப்பிரமணியன்

# ஒரு வாசகனின் மனப்பதிவு

நாம் சமய நம்பிக்கை உடையவராக இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, தமிழ்மொழிக்கும் சமயங்களுக்கும் இடையிலான உறவைப் புறக்கணித்துவிட முடியாது. பக்தியுணர்வு என்ற எல்லையைத் தாண்டி அவற்றின் பங்களிப்பு தமிழ் மொழியில் உள்ளது.

இலக்கிய இலக்கணங்களாகவோ, தத்துவங்களாகவோ எழுதப்பட்டிருப்பினும் அவை இப்பயன்பாட்டு எல்லையைத் தாண்டி தமிழ் மொழி மற்றும் தமிழ்நாட்டின் வரலாற்றுக்கான அரிய தரவுகளைத் தம்முள் கொண்டுள்ளன. சமூகவியல் செய்திகளும் கூட இவற்றில் அடங்கியுள்ளன.

இவ்வகையில் தமிழ்க் கிறித்தவத்தின் பங்களிப்பும் உண்டு. ஐரோப்பியர்களால் பரப்பப்பட்ட சமயம் என்று ஒதுக்கிவிட முடியாது. பதினாறாம் நூற்றாண்டில் கத்தோலிக்கக் கிறித்தவமும் இங்கு அறிமுகமாயின.

தம் சமய பரப்பல் பணியின் ஓர் அங்கமாக இவர்கள் தமிழ்மொழியைப் பயின்றனர். கூட்டு வழிபாட்டைக் (Congregational prayer) கொண்ட சமயம் என்பதால், கிறித்தவர்கள் தம்சமயம் சார்ந்த சில வழிபாட்டு மந்திரங்களை (மன்றாட்டுகளை) அவசியம் தெரிந்திருக்க வேண்டும். கிறித்தவத்தின் புனித நூலான விவிலியத்தை வாசிப்பதும் அவசியமான சமயக் கடமையாக இருந்தது. ஆனால், ஒடுக்கப்பட்ட மக்கள் பிரிவினரே பெருமளவில் கிறித்தவத்தைத் தழுவியிருந்தனர். அவர்களுக்கு எழுத்தறிவு கற்றுக்கொடுக்க வேண்டிய கடமை கிறித்தவ மறைப் பணியாளர்களுக்கிருந்தது.

இக்கடமையை நிறைவேற்றும் வழிமுறையாக, புதிய கிறித்தவர்கள் பயில பள்ளிக்கூடங்களை நிறுவினர். நூல்களை அச்சடிக்க அச்சுக்கூடங்களை நிறுவினர். தமிழைப் பயின்று நூல்களையும், குறுநூல்களையும், துண்டு வெளியீடுகளையும் அச்சிட்டு வெளியிட்டனர். விவிலியம், இறையியல் பக்தி என்பனவே அச்சிடப்பட்ட நூல்களின் உள்ளடக்கமாக அமைந்தன. தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தல், அகராதி உருவாக்கல், இலக்கணம், இலக்கியம் படைத்தல் என்பன இவற்றின் தொடர்ச்சியாய் அமைந்தன. பதினாறாவது நூற்றாண்டிலேயே போர்ச்சுக்கீஸ் தமிழ் அகராதி உருவானது.

பள்ளிக்கூடங்கள் நிறுவி கற்பிக்கும் பணியை அவர்கள் மேற்கொண்டனர். 'எண்', 'எழுத்து' என்ற எல்லையைத் தாண்டி நிலவியல், அறிவியல் போன்ற நவீன அறிவுத்துறைகளைக் கற்பிக்கலாயினர். கற்கும் மாணவர்களுக்காக இவ்வறிவுத் துறை சார்ந்த பாடநூல்களைத் தமிழில் எழுதி அச்சிட்டனர். ஐரோப்பாவின் 'புத்தொளிக்காலம்' (Age of Enlightenment) உருவாக்கிய புதிய அறிவு கிறித்தவத்தின் வாயிலாக தமிழ்நாட்டில் அறிமுகமானது.

**'கிறித்தவமும் தமிழும்'** என்ற நூலில் மயிலை சீனி. வேங்கடசாமி, **'விஞ்ஞான நூல் வரலாறு'** என்ற தலைப்பிலான இயலில் இப்பணிகள் குறித்து, பின்வரும் மதிப்பீட்டைச் செய்துள்ளார்.

"ஐரோப்பியரின் தொடர்பினால் தமிழ் மொழியில் உரைநடை நூல்களும் அச்சுப் புத்தகங்களும் ஏற்பட்டது போலவே மற்றொரு வகை நூலும் உண்டாகியிருக்கிறது. அதுதான் விஞ்ஞான நூல். நாம் விஞ்ஞான நூல் என்று சொல்வது பூகோள நூல், வான நூல், பிராணி நூல், ஐக்ஷத்திரக் கணிதம், தேச சரித்திரம், உடல் நூல் முதலியவைகளையே. ஐரோப்பியர் வருவதற்கு முன்னே இந்த விஞ்ஞான நூல்கள் (வானநூலைத் தவிர) தமிழ் மொழியிலும் ஏனைய இந்திய மொழிகளிலும் இருந்தன வில்லை.

பாதிரிமார்கள் பாடசாலைகளை அமைத்து நமது நாட்டுச் சிறுவர் சிறுமிகளுக்கு ஐரோப்பிய வழக்கத்தைப் பின்பற்றிப் பாடங்களைப் போதிக்க முற்பட்ட பொழுது, எழுதுதல், படித்தல், கணக்குப் போடுதல் என்னும் மூன்றுடன் மட்டும் நில்லாமல் பூகோள நூல், வானநூல், இயற்கைப் பொருள் நூல், ஐக்ஷத்திரக் கணிதம், தேச சரித்திரம் முதலிய விஞ்ஞான நூல்களையும் கற்பிக்கத் தொடங்கினார்கள். பாடசாலைகளில் இத்தகைய விஞ்ஞான நூல்களைப் போதிக்கத் தொடங்கியபடியால் தமிழில் இந்நூல்கள் எழுதப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

இவ்வாறு அறிவியலைத் தமிழில் அறிமுகப்படுத்திய கிறித்தவர்கள் குறித்த செய்திகளை இன்றைய தலைமுறையினர் அறிந்துகொள்ளும் வகையில் டாக்டர் சு.நரேந்திரன் இந்நூலை எழுதியுள்ளார். நூலின் முன்னுரையில் தமிழ்ப்பணி குறித்த நூல்களில் அறிவியல் வளர்த்த கிறித்தவர்கள் பற்றிய தகவல்கள் மிகமிகக் குறைவாக இருந்தன என்று குறிப்பிட்டுள்ளார். இது உண்மை தான். இக்குறையைப் போக்கும் வகையில் பல செய்திகளைத் தொகுத்து இந்நூலை எழுதியுள்ளார்.

தமிழ்நாட்டில் நவீனக்கல்வி முறையை அறிமுகப் படுத்தியதுடன் அதை ஜனநாயகப்படுத்தி அடிமைத்தள மக்களிடம் கொண்டு சென்றதில் சீர்திருத்தக் கிறித்தவத்திற்குப் பெரும்

பங்குண்டு. அதே நேரத்தில் அது காலனிய ஆதிக்கத்துடன் நெருக்கமான தொடர்பைக் கொண்டிருந்தது. இதையும் கணக்கில் எடுத்துக்கொள்வது தொடர்பாக த.வி.வெங்கடேஸ்வரன் கருத்தை, ஆசிரியர் மேற்கோளாகக் காட்டுவது குறிப்பிடத்தக்கது.

கிறித்தவ சமயமானது இன்று பல உட்பிரிவுகளைக் கொண்ட சமயமாகக் காட்சியளிக்கிறது. இவற்றுள், ரோமன் கத்தோலிக்கம், சீர்திருத்தக் கிறித்தவம் (பிராட்டஸ்டண்ட்) என்ற இரண்டும் பழமையானவை. தமிழ்நாட்டைப் பொறுத்த அளவில் முதலில் அறிமுகமான கிறித்தவ சமயப் பிரிவு ரோமன் கத்தோலிக்கம் தான். சனவெகுத்தன்மை கொண்டதாக இது ஆரம்பகாலத்தில் ஐரோப்பாவில் விளங்கியது. உலகம் உருண்டையானது. அது தன்னைத்தானே சுற்றி வருகிறது என்ற உண்மையைக் கண்டறிந்த கலீலியோவை சிறையில் அடைத்தும், புருனோ என்ற விஞ்ஞானியை உயிருடன் கொளுத்தியும் அறிவியல் உண்மைகளுக்கு எதிராகச் செயல்பட்டது.

16ஆம் நூற்றாண்டில் போர்ச்சுக்கீசியர்களின் துணையுடன் தமிழ்நாட்டில் அறிமுகமான கத்தோலிக்கம், பண்பாடு ஏற்றலை மேற்கொண்டு சடங்காசாரங்களைக் கொண்ட சமயமாக விளங்கலாயிற்று. ஐரோப்பாவின் புத்தொளிக் காலச் சிந்தனைகளை உள்வாங்கிய சமயமாக அறிமுகமான சீர்திருத்தக் கிறித்தவம், தமிழ்நாட்டில் சமயத்தையும் கல்வியையும் இணைத்துச் செயல்படத் தொடங்கியது. விவிலிய வாசிப்புக்கு முக்கியத்துவம் கொடுத்தமையால், எழுத்தறிவை புதிய கிறித்தவர்களுக்குக் கொடுக்க வேண்டிய கடப்பாடு அதற்கிருந்தது. இதன் அடிப்படையில் நவீனக் கல்வி கற்பிக்கும் கல்விக் கூடங்களை நிறுவியது. இவ்வுண்மையை “ஒரு கையில் விவிலியத்தையும் மறுகையில் அறிவியலையும் ஆரம்ப காலங்களிலேயே எடுத்துக்கொண்டவர்கள்” என்கிறார் இந்நூலாசிரியர்.

காலரா நோய் குறித்து 1818ஆம் ஆண்டில் ரேனியஸ் அய்யர் எழுதி வெளியிட்ட துண்டறிக்கை மேலை அறிவியலை அறிமுகப்படுத்தும் தொடக்க கால முயற்சியின் வெளிப்பாடு என்பது நூலாசிரியரின் கருத்தாகும்.

பாரம்பரியமான இலக்கியச் செல்வங்களைக் கொண்ட நாடு தமிழ்நாடு. கூலவாணிகர், கொல்லர், கணக்கர், பொன்வணிகர், மன்னர் எனப் பல்வேறு வாழ்க்கைப் படிநிலைகளில் உள்ளோர் பாடிய கவிதைகளின் தொகுப்பாக சங்க இலக்கியம் விளங்குகின்றன. கல்வி பரவலாக்கப்பட்டிருந்ததன் வெளிப்பாடாக இதைக் கொள்ளலாம். ஆனால் இடைக்காலத்தில் கல்வி குறிப்பிட்ட சில வகுப்பாரின் உரிமையாய்ப் போனது; மடங்களுக்குள்ளும், கோவில்களுக்குள்ளும் முடங்கிப் போனது.

இத்தகைய சமூகச் சூழலில் கிறித்தவம் கல்வியை அனைவருக்கும் வழங்கி ஜனநாயகப்படுத்தியது. இது குறித்து “பனை மரம் ஏறியவர் பனை ஓலை படிக்க ஆரம்பித்தனர்.” வேதம் சொல்லிக் கொடுத்த திண்ணைப் பள்ளியானது அறிவியலைப் போதித்தது” என்கிறார் நூலாசிரியர்.

அதே நேரத்தில் தமிழர்களுக்கு அறிவியல் பாரம்பரியம் இல்லை என்ற முடிவுக்கு ஆசிரியர் வரவில்லை. அறிவியல் தமிழ் அறிஞர் இராம. சுந்தரத்தின் கருத்தை மேற்கோளாகக் காட்டி, நம் பாரம்பரிய அறிவியல் தொடர்பான உண்மைகளை நினைவூட்டுகிறார். மெக்காலே கல்வி முறை குறித்த ஆசிரியர் கருத்து விவாதத்திற்குரியது. அதன் எதிர்மறைக் கூறுகளை ஆசிரியர் கணக்கிலெடுத்துக் கொள்ளவில்லை என்று கருத இடமுள்ளது.

‘நூல் உள்ளே நுழையுமுன்’ என்ற தலைப்பிலான நூலாசிரியரின் முன்னுரையும், ‘அறிவியல் புத்துயிர் பெற்றது’, ‘17, 18 ஆம் நூற்றாண்டின் தமிழகக் கல்வி நிலை’, ‘மேலை நாட்டு கிறித்தவர் வருகையும் தமிழருக்கான வரவுகளும்’ என்ற தலைப்புகளில் அமைந்துள்ள முதல் மூன்று இயல்களும் வரலாற்றுப் பின்புலத்தில், சமூகவியல் அணுகுமுறையில் எழுதப்பட்ட ஆய்வுரையாக அமைந்து உள்ளன. அத்துடன் இந்நூலின் தேவையையும் உணர்த்தி நிற்கின்றன.

இதனையடுத்து அறிவியலின் பல்வேறு பிரிவுகளான மருத்துவம், வானியல், தாவரவியல், கணிதவியல், நூலகவியல், மனையியல், இதழியல் ஆகியனவற்றைத் தமிழ்மொழியில் அறிமுகப்படுத்திய கிறித்தவர்கள் குறித்தும், அவர்களது பணி குறித்தும் குறிப்பிடும் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இவர்களில் ஐரோப்பாவில் இருந்து வந்த சமயப் பணியாளர்கள், அரசு அலுவலர்கள் வேறு பணிகளில் இருந்தோர் எனப் பலதரத்தினர் உள்ளனர். இலங்கையில் பணியாற்றிய மறை போதகர்களையும், இலங்கைத் தமிழ்க் கிறித்தவ அறிஞர்களையும் இணைத்துள்ளார்.

16ஆம் நூற்றாண்டு தொடங்கி இருபதாம் நூற்றாண்டு வரையிலான காலத்தில் மேற்கொள்ளப்பட்ட பணிகளை இந்நூலில் ஆசிரியர் தொகுத்தளித்துள்ளமை பாராட்டுதலுக்குரியது. சீகன் பால்கு, ரேனியஸ் அய்யர், கால்டுவெல் எனப் பரவலாக அறிமுகமானவர்களை மட்டுமின்றி, ஆய்வாளர்கள் மட்டுமே அறிந்திருந்த சில ஆளுமைகளையும் இந்நூல் வாயிலாக அறிந்துகொள்ள முடிகிறது. வாசகனை வியப்படையச் செய்யும் பல அரிய செய்திகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

சான்றாக, சில செய்திகள் வருமாறு:

- கிரண்ட்லர் என்ற ஜெர்மானிய மதபோதகர் தமிழக மருந்து மூலிகைகள், அவற்றின் மருத்துவப் பயன்பாடு குறித்து 1711ஆம் ஆண்டில் ‘மலபார் மருந்துகள்’ என்ற தலைப்பில் ஜெர்மானிய மொழியில் குறிப்புகள் எழுதியுள்ளார். இதன் தாக்கத்தில் 1712ஆம் ஆண்டில் கோப்பன் ஹோமில் தமிழ் மருத்துவம் கற்பிக்கப்பட்டது.
- 1832இல் ‘பூமி சாஸ்திரம்’ என்ற நூலை ரேனியஸ் அய்யர் வெளியிட்டார். இதுதான் முதல் தமிழ் அறிவியல் நூலாகும்.
- இலங்கையில் பணியாற்றி டாக்டர் சாமிவேல் ஃபிஷ்கிரீன் என்ற அமெரிக்க மதபோதகர் மருத்துவக் கல்வியைத் தமிழில் கற்பித்து உள்ளார். மொழிபெயர்ப்பாகவும் சுயமாகவும் மருத்துவ நூல்களை 19ஆம் நூற்றாண்டில் வெளியிட்டுள்ளார்.
- கிறித்தவராதல் என்பது தேசியத்தை இழப்பதல்ல என்பது டாக்டர் கிரீனின் கருத்தாக இருந்தது. அவரது மருத்துவ மாணவர்கள் ‘அக்காலத்தைய வேட்டி, சால்வை, தலைப் பாகையுடன்’ பழைய புகைப்படங்களில் காட்சி தருவதாக நூலாசிரியர் குறிப்பிடுகிறார்.
- ஆங்கில நூல்களுக்கு ஈடாக படங்களுடன் அவர் வெளியிட்ட




நூல்களின் பக்க எண்ணிக்கை 4500 பக்கங்கள் ஆகும். மருந்தியல், பெண்கள், குழந்தைகள் வைத்தியம், உடற்கூறு இயல், அறுவை சிகிச்சை, வேதியியல் என பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே மொழிபெயர்ப்பாகவும், சுயமாகவும் மருத்துவ நூல்களை எழுதி வெளியிட்டதுடன் 'கண், காது, கை, வாய், உடல்' ஆகியன குறித்துப் பல அரிய நூல்களையும் எழுதி வெளியிட்டுள்ளார்.

- மூன்றாண்டுப் பாடத்திட்டத்தில் முப்பத்து மூன்று மாணவர்களுக்கு மருத்துவக் கல்வியை தமிழ்மொழி வாயிலாகக் கற்பித்த கிறீன், அரசு மற்றும் தனியார் மருத்துவமனைகளுக்கும் பணியாற்ற அவர்களை அனுப்பியுள்ளார். இச்செய்திகளுடன் தன் கருத்தாக, "இன்றைக்குக் கூட நாம் செய்ய முடியாத செயலைத் தனி மனிதனாக ஓர் அமெரிக்கர் செய்து காட்டியது நம்மை வியக்க வைப்பது மட்டுமின்றி, தமிழ்ப் பல்கலைக்கழகம் முதல் மருத்துவப் பல்கலைக்கழகங்கள் வரை தமிழகத்தில் இருந்தும், இது இன்று வரை நடைபெறாதது தமிழர்களாகிய நம்மை வெட்கித் தலைகுனிய வைக்கும் செயல் ஆகும்" என்று வருந்துகிறார். 1908ஆம் ஆண்டில் 'மானுட மர்ம சாஸ்திரம்' என்ற தலைப்பில் பாலியல் மற்றும் மகளிர் மருத்துவத்தைக் கற்பிக்கும் நூல் பர்மாவில் (மியான்மர்) அச்சிடப்பட்டு வெளியாகியுள்ளது. இதன் ஆசிரியர் சாமுவேல் என்பவர் மருத்துவமனைத் தலைவராக ரங்கூனில் இருந்துள்ளார்.

கிறித்தவர் நடத்திய அறிவியல் இதழ்கள், பதிப்பகங்கள் தொடர்பான செய்திகளும் நூலில் இடம் பெற்றுள்ளன. ஜெர்மானியர்களான சீகன் பால்கும், கிரண்ட்லரும், இத்தாலியரான வீரமாமுனிவரும் தமிழ் மூலிகை மருத்துவத்தில் காட்டிய ஈடுபாடு குறித்து ஆசிரியர் கூறும் செய்திகள் நம்மை வியக்க வைக்கின்றன.

பல அரிய செய்திகள் கருவூலமாக அமைந்துள்ள இந்நூலின் ஆசிரியர் கிறித்தவர் அல்லர். கிறித்தவ அமைப்பு எதனிடமும் நிதி நல்கை பெறாது இந்நூலை எழுதியுள்ளார். தமிழ் மொழியின் மீது அவர் கொண்டுள்ள உண்மையான பற்றே இந்நூலை எழுதும்படி தூண்டியுள்ளது. மருத்துவ நூல்களையும் வெகுஜன வாசிப்பிற்கான மருத்துவ மற்றும் உடல்நல நூல்களையும் தொடர்ந்து எழுதி வருபவர். தமிழ் இலக்கிய வரலாற்றில் அதிகமாகக் கண்டுகொள்ளப்படாத ஒரு பகுதியை இந்நூலின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார். அவரது ஆர்வமும் உழைப்பும் பாராட்டுதலுக்குரியன என்பதோடு வழிகாட்டியாகவும் அமையும் தன்மையன.

**கிறித்தவமும் அறிவியலும்**
**ஆசிரியர்: டாக்டர் சு.நரேந்திரன்**
**வெளியீடு: கொற்றவை**
**4/2, சுந்தரம் தெரு, (நடேசன் பூங்கா அருகில்)**
**தியாகராய நகர்,**
**சென்னை - 600 017**

# பிளவுகளை இணைத்த பாலங்கள்





இந்திய கிறித்தவ வரலாற்றில் திருச்சபைகளுக்குள் சாதியத்தின் விபரீதத்தை அறியாமல் அவற்றை இனங்காணாமல் கிறித்துவக் கோட்பாடுகளை மட்டுமே விதைத்தனர் ஆரம்ப கால மிஷனெரிகள். ஐரோப்பாவில் பின்னாட்களில் நிறுவப்பட்ட பல்வேறு மிஷனெரி இயக்கங்களிலிருந்து இங்கு வந்த மிஷனெரிகள் அவற்றுள் காணப்பட்ட ஐரோப்பிய சபை பாகுபாடுகளை தாம் சமயப் பணியாற்றிய இந்திய திருச்சபைகளுக்குள்ளும் நுழைக்க வேண்டியதாயிற்று.

இதனால் 19ஆம் நூற்றாண்டில் சபைகளுக்கிடையே பலத்த பிரிவினைகள் தோன்றி சபைகள் பிளவுப்பட்டுக்கிடந்தன. அவ்வப்போது அதன் ஒற்றுமைக்காக ஆங்காங்கே எழுந்த குரல்களும் அடங்கி போய் பிளவுகள் விருத்தியடைந்தன. இதனால் அன்றைய சபைகளில் மக்களிடையே ஆன்மீக வளர்ச்சி தடைபட்டு பெயரளவில் கிறித்தவ கோட்பாடுகளில் மக்கள் தடுமாறியபடி நின்று கொண்டிருந்தனர்.

இந்திய கிறித்தவத்தில் தொடக்க காலம் முதலாக பின்பற்றப்பட்டு வந்த ரோமானிய திருச்சபை ஒழுங்குகள் 18 ஆம் நூற்றாண்டில் லுத்தரன் சபையினரான ( Lutheran Church Mission) சீகன் பால்க், புளுட்சோ ஆகியோரின் வருகையால் ( கி.பி 1701) மாற்றங்கண்டது. புரோட்டஸ்டண்ட் மரபினரான இவர்களுக்கு அடுத்து வந்து தென்னிந்திய திருச்சபைகளில் பெரும் மாறுதல்களை ஏற்படுத்திய சுவார்ட்ஸ் என்ற மிஷனெரி கடற்கரைகளில் மட்டுமே தேங்கி வளர்ந்த கிறித்தவத்தை நாட்டின் உட்பகுதிகளுக்குள்ளும் தெளிந்த நீரோடைகளாக பரவியோட வழி வகுத்தார்.

லண்டனில் 1701ல் ஏற்படுத்தப்பட்ட SPG என்ற மிஷனெரி சங்கம் 19 ஆம் நூற்றாண்டில் கல்கத்தாவில் ஓர் ஊழியர் பயிற்சிக் கல்லூரியை நிறுவியதோடு இந்தியாவில் அதன் பிற பணிகளையும் தொடர்ந்தது.

இதற்கிடையில் இங்கிலாந்தில் சர்ச் மிஷன் (CMS) சங்கத்தின் மூலம் சுத்தாங்க சுவிசேஷ இயக்கத்தினரால் கி.பி1799 முதல் உலகம் முழுவதும் மிஷனெரிகள் அனுப்பப்பட்டனர்.

CMS சங்கத்தார் சுவிசேஷத்தை உலகெங்கும் பரப்புவதையே உயிர் மூச்சாக கொண்டவர்கள். அத்தோடு வேதாகமத்திலுள்ளவற்றை அப்படியே எந்த மாற்றமும் இன்றி கடைபிடிக்க போதிப்பவர்கள். இவர்கள் எவ்விதத்திலும் ரோமானிய சபை மரபுகளான சிலுவை வழிபாடு, அங்கியணிதல், பலிபீடம், அலங்கார ஆடைகள் அணிதல், தூபங்காட்டுதல் போன்ற வழக்கங்களை சபைகளுக்குள் கடைபிடிக்கப்பட கூடாது என்பதில் கவனம் செலுத்தினர்.

இந்த சுத்தாங்க (CMS) இயக்கம் மூலம் வந்த மிஷனெரிகளான இரேனியஸ், ஷ்மிட் ஆகிய மிஷனெரிகள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தென்னிந்திய பகுதிகளில் பெரும் புரட்சியை ஏற்படுத்தினர். இதில் ரேனியஸ் 17 ஆண்டு காலம் 300 க்கும் மேற்பட்ட சபைகளை ஏற்படுத்தி அதை தாம் வளர்ந்து வந்த சர்ச் மிஷன்(CMS) மரபு படியே அச்சபைகளையும் நடத்தி வந்தார்.

இதற்கிடையே ஆங்கிலத் திருச்சபைக் குருக்களான பியூசி, கீபில், நியூமென் போன்றோர் CMS முறைமைகளுக்கு எதிராக ரோமானிய சபை மரபுகளை ஆதரித்து அவற்றை சபைகளுக்குள் நுழைத்தனர். இவர்கள் தங்களை உயர்ந்த கொள்கை உடையவர்கள் என்றும் CMS பிரிவினரை 'சுவிசேஷ சங்க கீழ்முறையார்' என்றும் அழைத்துக் கொண்டனர். இவர்கள் (SPG) ஆலய ஆராதனை முறைமைகளையும் திருச்சபையின் வேதசித்தாந்த பிரமாணங்களையும் முக்கியப்படுத்தினர்.

ஆயினும் இருதிறத்தாரும் அவரவர் நிலைப்பாட்டில் தாங்களே உயர்ந்த கொள்கையுடையவர்களாக எண்ணிக் கொண்டு ஒருவரை ஒருவர் பகைமையுணர்வோடு சாடியபடியே கிறித்தவத்தில் நிலைத்தும் வந்தனர். இந்நிலைப்பாடு போதகர்களோடு மட்டும் நின்று விடாமல் சபை உறுப்பினர்களுக்கிடையேயும் கசப்புணர்வு புரையோடி போய்க் கிடந்தது. 19 ஆம் நூற்றாண்டில் இவ்விரு இயக்கங்களுக்கிடையேயான அபிப்பிராய வேறுபாட்டால் எழுந்த

போட்டிகளும், பொறாமைகளும், பகையுணர்வும் கிறித்தவ சித்தாந்தத்தையே சீரழிவிற்குள்ளாக்கி கொண்டிருந்தன.

ஆங்கிலிக்கன் சபைகளின் இருபெரும் இயக்கங்களாக திகழ்ந்த CMS, SPG ஆகிய இவ்விரண்டுப் பிரிவினரும் அவ்வப்போது கடுமையாக மோதிக்கொண்டு, பிற மதத்தவர்களிடையே சாட்சியிழந்து தான் நின்றிருக்க வேண்டும்.

இன்றைய காலகட்டத்திலும் ஒரே திருச்சபைக்குள் நிலவும் பகைமையுணர்வின் பிரதிபலிப்புகள் நமக்கு இந்நிலையைத் துல்லியமாகத் தெளிவுபடுத்துகிறது. அப்பொழுது இவ்விரு இயக்கங்களும் சென்னையிலிருந்த ஒரே பேராயரின் கீழ் தான் இயங்கின என்பதும் குறிப்பிடத்தக்கது. அந்நிலையில் திருநெல்வேலியில் ஏற்பட்டிருந்த கிறித்தவ சமய வளர்ச்சியினால் அன்றைய அனைத்து சபைகளையும் சென்னையிலிருந்து ஒரே தலைமைப் பேராயரால் ஆளுகைச் செய்வது கடினமானதாக உணரபட்ட போது திருநெல்வேலி தனியொரு திருமண்டலமாக இயங்குவதே சரியானதாக முடிவெடுக்கப்பட்டது.

ஆனாலும் இவர்களுக்குள் காணப்பட்ட CMS, SPG என்ற சபை பாகுபாட்டை கருத்தில் கொண்டு CMS பிரிவினருக்கு ஒரு பேராயரும் SPG பிரிவினருக்கு மற்றொரு பேராயருமாக நியமிக்கப்பட்டனர்.

பாளையங்கோட்டையை தலைமையகமாக கொண்டு CMS சபைகளின் பேராயராக சார்ஜென்ற் ஐயரும் இடையன்குடியைத் தலைமையகமாகக் கொண்டு SPG சபைகளுக்கு கால்டுவெல் ஐயருமாக கி.பி 1877 ல் நியமிக்கப்பட்டனர். இவர்கள் சென்னை முதன்மை பேராயருக்கு உதவிப்பேராயர்களாக பணியாற்றினர். இவ்விரு பிளவுகளும் முழுமையாக ஒட்டு உறவற்ற நிலமையையே ஏற்படுத்தும் என்ற கசப்பான எதிர்பார்ப்பினிடையே சார்ஜென்ற் பேராயரும் கால்டுவெல் பேராயரும் இப்பிளவின் விஷத்தன்மையை நன்கு அறிந்தவர்களாக இருந்ததால் சுதாரித்துக் கொண்டனர்.

இருவருமே சபைகளின் ஒற்றுமைக்கான வழிவகைகளை முன்னெடுக்க தலைபட்டனர்; நண்பர்களாக அடிக்கடி கூடி, தங்களது அன்பையும் பிரிவினைகளை அகற்றும் ஆலோசனைகளையும் பரிமாறிக் கொண்டனர். சிறந்த சுவிசேகரான கால்டுவெல்லும் சிறந்த நிர்வாகத்திறன் மிக்க சார்ஜெண்டும் திருச்சபை வளர்ச்சி காரியங்களில் இணைந்தே செயல்பட்டனர். அவர்கள் இருவரின் தலைமையில் சபையினரும் இணைந்து சமயப்பணிகளிலும் வழிபாட்டு கூடுகைகளிலும் பங்கெடுத்தனர். இதனால் ஒற்றுமையுணர்வு இருதிறத்தார்களிடமும் துளிர்விட தொடங்கியது. இரு பேராயர்களும் தங்களது சபைக் காரியங்களைக் குறித்து ஆலோசிக்கவும் விவாதிக்கவும் கி.பி 1873 ஆம் ஆண்டு CMS, SPG மிஷனெரி ஆலோசனைக் கழகம் என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தினர். இரு மிஷனெரிகளின் நோக்கமும் சுவிசேஷப்பணியின் விரிவாக்கமே என்றிருந்ததால் அவரவர் தங்களது பாதைகளில் சென்றாலும் ஒருமித்த இலக்கில் உறுதியாக பயணித்தனர்.

இப்பயணத்தின் பிரதிபலிப்பு இரு பிரிவினரையும் ஒற்றுமைக்கான வழிகளைச் சிந்திக்கத் தூண்டியது. கசப்புகளும் வேற்றுமைகளும் அகல தொடங்கின. சமயப் பற்றை நோக்கிய ஒரு ஆரோக்கியமான அறிவுப்பூர்வ வளர்ச்சி ஏற்பட்டுக் கொண்டிருந்தது. இவ்விரு மிஷனெரிகளின் முதிர்ச்சி மிக்க செயல்பாடுகள் அன்றைய மற்ற பேராயர்களையும் குருக்களையும் இவர்கள்பால் ஈர்த்தது. பேராயர் ஜெல் என்பவரால் இவ்விருவரும் **இரட்டை நட்சத்திரங்கள்** என்று புகழப்பட்டார்கள். இவர்களைத் தொடர்ந்து முதல் இந்திய பேராயரான பேராயர் வேதநாயகம் சாமுவேல் அசரியா என்பவர் தமிழ்நாட்டில் பிறந்தவராவார். பிளவுகளுக்கெதிராக கருத்தொற்றுமைகளுக்கான இவரது தலையீடு பெரும் வெற்றியை ஏற்படுத்தி தந்தது. இவரே ஆங்கிலிக்கன் சபையின் முதல் இந்தியப் பேராயராக கி.பி 1912 டிசம்பர் மாதம் 29 ஆம் நாள் அபிஷேகம் பெற்று, தோர்ணக்கல் பேராயராக நியமனம் பெற்றிருந்தார். இவர் திருச்சபை பாகுபாடுகள் எங்கும் அறவே இருத்தல் கூடாது என்ற முனைப்போடு அதற்கான பல்வேறு முயற்சிகளை எடுத்தார். அவர் இந்தியரானபடியால் சபைப்பிரிவுகள் மற்றும் மக்களின் மனநிலைகளையும் அதனால் ஏற்பட இருந்த தீர்க்க இயலாத எதிர்கால சிக்கல்களையும் ஐரோப்பிய மிஷனெரிகளை விடவும் மிக தீர்க்கமாகக் கணித்து அவற்றை களைய அரும்பாடுபட்டார்.

இந்த இருபெரும் சங்கங்களும் மார்க்கப் பேதமற்று ‘இந்து தேசத் திருச்சபை’ என்று எப்போது அழைக்கப்படுமோ என்ற தனது ஏக்கத்தை பொது சமயக் கூட்டங்களில் வெளிப்படுத்தினார். இன்றைய அத்தியச்சாதன நடைமுறைகளை அன்றே தரிசித்தும் கூறினார்....! இனி இணைந்து புதியதாக ஏற்பட இருக்கும் திருச்சபை இந்தியர்களும் ஐரோப்பியர்களும் சேர்ந்த சபையாக விளங்கும். அதில் வேத சித்தாந்தங்களும், ஒழுங்குகளும், சிட்சை விதிகளும் இங்கிலாந்து திருச்சபைக்கு ஒத்திருந்த போதிலும் இந்நாட்டின் கலாச்சார மரபுகளை ஒட்டி சில சித்தாந்தங்களும் சிட்சைகளும் மாறுபட்டு இருக்கும் என்றதோடு, இச்சபை விசாரணையில் அத்தியட்சரும், குருக்களும், சபைபிரதிநிதிகளும் கொண்ட சினாட் சபை ஒன்றிருக்க வேண்டும். சபை சுய ஆதரவு பெற்றிருக்கும் என்றும் உறுதிபட எடுத்துரைத்தார்.

SPG, CMS என்ற பிரிவுகள் மட்டுமல்லாமல் Methodist, Brethren, Weslian, Presbyterian, Episcopal, Congregational போன்ற பல பிரிவுகள் தங்களுக்குள்ளான சிறு சிறு மாற்றங்களை வைத்துக்கொண்டு பிரிந்து கிடந்தன. இவற்றை ஒன்றிணைத்துப் பார்க்கும் பேராவலோடு பேராயர் அசரியா, Ecumenical movement ஒன்றைத் தொடங்கி உலக அளவில் நடந்த பல மாநாடுகளில் இதைக் குறித்து பேசினார். இதன் தொடர் முயற்சியாலும் ஏற்கனவே ஒற்றுமையுணர்வை விதைத்திருந்த சார்ஜென்ற் மற்றும் கால்டுவெல் போன்றோரின் முயற்சியினாலும் மக்களின் மனங்கள் ஓரளவு அசரியாவின் தரிசனத்தை எட்டிப் பிடிக்குமளவில் கனியத் தொடங்கியிருந்தது.

இதன் விளைவாக கி.பி 1947 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 27 ஆம் தேதி பல்வேறு பாரம்பரியங்களை உடைய பல்வேறு சபைகள் ஒன்றிணைந்து தென்னிந்திய திருச்சபை (Church of south India) என்ற மாபெரும் திருச்சபையாக ஒன்றுபட்டு இன்று வரை நிலை நிற்பது சகல அதிகாரத்திற்கும் துரைத்தனங்களுக்கும் தலைவரான அருட்கடவுளின் அளவற்ற இரக்கமே என்றால் அது மிகையாகாது.

**Dr. ஜான்சிபால்ராஜ்**

வன்னியன் குடியிருப்பு




ஆபிரகாம் பண்டிதரின் இசைத்தமிழ் ஆய்வு நூலான

# கருணாமிர்த சாகரத்தின்

## சமுதாயப் பின்புலம்

### பண்டிதர் அவர்களின் பிறந்த மற்றும் நினைவு மாத சிறப்பு கட்டுரை

செவ்வியல் கலைகள் மற்றும் நாட்டுப்புறக் கலைகள் என் உன்னத நிலை எய்தி இருந்தன என்பதனை கி.பி. இரண்டாம் நூற்றாண்டு முத்தமிழ் காப்பியமான சிலப்பதிகாரத்தின் வாயிலாக அறிய முடிகிறது. கி.பி மூன்றாம் நூற்றாண்டு முதல் ஆறாம் நூற்றாண்டு வரையிலான களப்பிர மரபினரின் ஆட்சிக் காலத்தில் இசை, கூத்து முதலான நுண்கலைகள் ஆக்கமிழந்து ஆதரவற்றுப் போயின. தமிழ்நாட்டு முடிமன்னர்களான சேர, சோழ, பாண்டியர்கள் ஆட்சி கி.பி.12-ம் நூற்றாண்டிற்குப் பின் வீழ்ச்சியுற்ற போது, தமிழ்க் கலைகள் பொலிவிழந்து, பிற மொழியினருக்கு அடிமையாயிருந்தன. தமிழ் மொழியானது முத்தமிழாக இயல் தமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ் எனக் கூறப்பட்டாலும், கி.பி 19-ம் நூற்றாண்டு கால கட்டத்தில் இசை பற்றித் தமிழர்களுக்கு எதுவும் தெரியாது எனச் சொல்லுமளவுக்கு அதன் நிலை தாழ்ந்து சென்று விட்டது. இசைத்தமிழ் நூல்கள் பல காலவெள்ளத்தில் அழிந்து போய்விட்டன. இக்காலகட்டத்தில் கி.பி. 1917-ல் எழுந்த இசைத்தமிழ் நூல் 'கருணாமிர்த சாகரம்', இசை பற்றிய அறிவு பெறுதற்கும், பிற்கால இசை ஆய்வாளர்களுக்கு வழிகாட்டுவதற்கும் வாய்பாக அமைந்துள்ளது. பின்புலம் என்பது படைப்பிற்கும், படைப்பாளனுக்கும் இன்றியமையாத ஒன்றாகும். ஒரு சமுதாயப் பின்புலத்தில் பிறக்கின்ற இலக்கியம், அந்தச் சமுதாயத்தை நேரடியாகவோ, மறைமுகமாகவோ புலப்படுத்துகின்றது. இங்குக் கருணாமிர்த சாகரம் நூலின் சமுதாயப் பின்புலத்தை காண்போம்.

#### ஆசிரியர் குறிப்பு

கருணாமிர்த சாகரம் செய்த மு.ஆபிரகாம் பண்டிதர் (2-8-1859 – 31-8-1919), குற்றாலத்திலுள்ள சம்பவார் வடகரை என்ற ஊரில் திரு.முத்துசாமிக்கும், திருமதி.அன்னம்மாளுக்கும் புதல்வனாக பிறந்தார். பண்டிதர், பல்துறையில் ஒளி வீசிய பல்துறை வித்தகர். தமிழ் ஆசிரியப் பணி, மருத்துவர், வேளாண் விஞ்ஞானி, இசை ஆய்வாளர், பாடகர், வீணை வித்தகர், வயலின் கலைஞர், கீர்த்தனை ஆசிரியர், ஓவியர், புகைப்படக் கலைஞர், சொற்பொழிவாளர் (இசை வழி நற்செய்தி), எழுத்தாளர், இசைப் புரவலர் எனப் பன்முகம் கொண்ட மாபெரும் அறிஞர் மற்றும் கலைஞர்.

#### கருணாமிர்த சாகரம் முதல் நூலின் அமைப்பு

பண்டிதர் பல்லாண்டு ஆராய்ச்சியால் கி.பி. 1917-ம் ஆண்டு 'கருணாமிர்த சாகரம்' எனும் இசைத்தமிழ் நூலை வெளியிட்டார். தமிழிசை வரலாற்றில் உருவான மிகப்பெரிய இசை இலக்கண நூலான கருணாமிர்த சாகரம், பண்டிதரின் அரும்பெரும் அருட்கொடையே என்று கூறலாம். 1346 பக்கங்களைக் கொண்ட இந்நூல், நான்கு பகுதிகளாகப் பகுக்கப் பெற்றுள்ளது.

- முதல் பகுதி - பண்டைய தமிழகம் பற்றியும், முத்தமிழிலக்கணம் பற்றியும் அறிமுகப்படுத்துவதோடு இசைப்புலவர்களின் பெயரகராதியும் கொண்டுள்ளது.
- இரண்டாம் பகுதி - இசைச் சுருதிகள் 24 எனவும், 22 சுருதி முறை பிழைப்பட்டது எனவும் விளக்குவது.
- மூன்றாம் பகுதி - பெரும் பண்கள், திறப்பண்கள், பண்ணுப்பெயர்த்தல், ஆலாபனம், இராகங்களின் தொகை, இணை, கிளை, பகை, நட்பு என்னும் பொருந்திசைச் சுரங்களைக் கண்டு கொள்ளும் முறைகளை விளக்குவது.
- நான்காம் பகுதி - ஆயம், சதுரம், திரிகோணம், வட்டப்பாலை, யாழ் வகைகள், மாந்தரின் உடலுக்கும் யாழ் வடிவுக்கும் உள்ள ஒப்பீடு முதலியவற்றை விளக்குவது.

#### கருணாமிர்த சாகரம் இரண்டாம் நூலின் அமைப்பு

கி.பி. 1946-ம் ஆண்டு வெளியிட்ட இரண்டாம் நூல், இராகங்களைப் பற்றிய ஆய்வு

நூலாகும். ஏழிசை, பன்னிரு கோவைகளாக அமையும் பொழுது கோவைகளுள் இணை, கிளை, பகை, நட்பு என்ற இசைபுணர் நிலைகள் தோன்றும் என்பதை சிலப்பதிகார உரை வழி நின்று பண்டிதர் விளக்கியுள்ளார்.

### கருணாமிர்த சாகரத் திரட்டு நூலின் அமைப்பு

கி.பி. 1907-ம் ஆண்டு வெளியிட்ட இந்நூலில் உள்ள 96 தமிழ்ப் பாடல்களில் கீதம், சுரஜதி, கிருதி, ஜதீஸ்வரம், வர்ணம், கீர்த்தனைகள் முதலிய உருப்படிகள் உள்ளன. ஒவ்வொரு இசைப் பாடலுக்கும் சாகித்தியமும், சுரதாளக் குறிப்புகளும் பண்டிதர் தந்துள்ளார்.

### அரசியல் பின்புலம்

கி.பி 13-ம் நூற்றாண்டு முதல் 17-ம் நூற்றாண்டு வரை ஆட்சி செய்த விஜயநகரப் பேரரசர்கள், நாயக்கர்கள், மராத்தியர்கள் காலகட்டங்களில், தமிழ்நாட்டில் நடைபெற்ற இசையரங்குகளில் தெலுங்கிலும், கன்னடத்திலும் வடமொழியிலும் பாடல்கள் பாடப்பட்டு வந்தன. இசை வளர்த்த தஞ்சையிலும் தமிழிசை அழிவுக்குக் காரணமாக, தமிழரல்லாத பிறமொழி சார்ந்த அரசியல் சூழ்நிலையும் நிலவி வந்தது. 18-ம் நூற்றாண்டில் ஆங்கிலேயர் ஆட்சி நிலவினாலும், இக்காலகட்டங்களில் சங்கீதம் பாடிய பிராமண வித்துவான்கள் எல்லோரும், தெலுங்கு சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான தியாகராச சுவாமியின் சிறப்பு காரணமாக தெலுங்குப் பாடல்களையே பாடினார்கள். இச்சூழ்நிலையில் தெலுங்கிசை எவ்வாறு தமிழிசையை அப்பட்டமாகக் கவர்ந்து வளர்ந்தது என்பதையும், தமிழிசைக்கு இசை இலக்கணம் சரியாக இல்லை என்பதையும் கண்டுணர்ந்தார் ஆபிரகாம் பண்டிதர். தாய் மொழியில் தான் இசை சாகித்தியம் அமைய வேண்டும் என்பதை முதன் முதலாகச் சொன்னவர் பண்டிதர். ஆட்சி மொழி சார்ந்த பாடல்கள் கௌரவிக்கப்பட்டு, தமிழ்ப் பாடல்களைத் **'துக்கடாப் பாட்டு'** என்று இழிந்துரைத்த பின்புலமே கருணாமிர்த சாகரம் என்ற இசைத்தமிழ் நூல் தஞ்சையில் உருவாக்க காரணமாயிருந்தது.

### சமுகப் பின்புலம்

### புறச் சூழல்கள்

தமிழகத்தில் கடந்த இரண்டு நூற்றாண்டுகள் (19,20-நூற்), சமுகச் சீர்திருத்தங்களும், மாற்றங்களும் நிகழ்ந்த காலம் எனலாம். இவையெல்லாம் தானாக நடந்துவிடவில்லை. இவற்றிற்குப் பின்னணியாகத் தனி மனிதர்களின், பல்வேறு இயக்கங்களின் அர்ப்பணிப்போடு கூடிய மகத்தான உழைப்புகள் தேவைப்பட்டன. அவை 19-ம் நூற்றாண்டில் கைம்பெண் பிரச்சனை, தேவதாசி முறை முதலியவற்றை அகற்றி விதவைகள் மறுமணம், கலப்பு திருமணம், சமபந்தி போஜனம் முதலியவற்றை நடைமுறைப்படுத்துவதற்கு வழிவகுத்தன. இவற்றிற்கென்று தங்களை அர்ப்பணித்த மனிதர்களாக இராமலிங்க அடிகள், ஈ.வே.ரா பெரியார், வேதநாயகம் பிள்ளை முதலானவர்களையும், இயக்கங்களாக வைகுண்ட சுவாமிகளின் ஐயா வழி இயக்கம், பிரம்ம சமாஜம் முதலியவற்றையும் கொள்ளலாம். நவீனச் சமுகச் சீர்திருத்தச் சிந்தனைகளை அறிமுகப்படுத்தியவர்களில் கிறிஸ்துவ மதப் போதகர்களும் முக்கியப் பங்கு வகிக்கின்றார்கள். மொத்தத்தில் 19-ம் நூற்றாண்டின் சமுகச் சீர்திருத்த இயக்கங்கள் பரிணாம வளர்ச்சி பெற்று, 20-ம் நூற்றாண்டில் சுயமரியாதை இயக்கம், தீண்டாமை ஒழிப்புச் சட்டம் எனப் பல அரசியல் மாற்றங்களை ஏற்படுத்தியது. மேற்கூறிய புறச் சுழல்களே, ஆபிரகாம் பண்டிதர் என்ற ஒரு தனி மனிதனின் வளர்ச்சியில் **சங்கீத வித்தியா மகாஜன சங்கம்**, கி.பி. 1912 முதல் 1916-ம் ஆண்டு வரை ஏழு இசை மாநாடுகள் ஆகியவற்றை செயல்படுத்த பின்புலமாக இருந்து, கருணாமிர்த சாகரம் உருவாவதற்கும் துணை புரிந்தன.

### அகச் சூழல்கள்

கருணாமிர்த சாகரம் உருவாவதற்கு கி.பி.1892-ல் உ.வே.சாமிநாத ஐயர் அரும்பத உரை, அடியார்க்கு நல்லார் உரைகளுடன் வெளியிட்ட சிலப்பதிகாரம் அடிப்படையாக அமைந்தது என்பதனைப் பல இடங்களில் பண்டிதர் குறிப்பிட்டுள்ளார். பண்டிதரின் இரண்டாம் மனைவி கோவில் பாக்கியம் அம்மாள், அவரிடம் பொதிந்திருந்த இசைஞானத்தையும், இசை ஆய்வையும் வெளிக்கொணர்ந்தவராக விளங்கினார். பண்டிதர் திண்டுக்கல் சடையாண்டி பத்தரிடம் பயின்ற இசைக் கலையைத் தஞ்சையில் உள்ள ஒரு நாதசுர வித்துவான் மூலம் வளப்படுத்திக் கொண்டார். கி.பி. 1916-ல் பரோடாவில் நடைபெற்ற அகில இந்திய இசை மாநாட்டில், பூர்வத்தமிழ் மக்கள் நுட்பச் சுருதிகளில் கானம் பண்ணினார்கள் என்பதனைத் தம் குமாரத்திகளால் செய்முறையில் விவரித்தார். மாவட்ட, மாநில, தேசிய மற்றும் உலக அளவிலான இசைப் புலமையுள்ளவர்களோடு கலந்து உறவாடி, பல்வேறு இசை குறித்த ஆழ்ந்த அறிவினைப் பெற்றதும் கருணாமிர்த சாகரம் எழுத பின்புலமாக இருந்தது. அவ்வாறு சிறப்பாகத் துணைபுரிந்தவர்களில், அரிகேசவநல்லூர் முத்தையாப் பாகவதரும், வீணை திரு.வெங்கடாசலம் ஐயர் அவர்களும் குறிப்பிடத்தக்கவர்கள். மேற்கூறிய அகச்சூழல்கள் பண்டிதரின் இசைத்தமிழ் நூல் உருவாக்க உறுதுணையாக இருந்துள்ளன.



**பொருளாதாரப் பின்புலம்**

மருத்துவத்திலும், வேளாண்மையிலும் பண்டிதர் ஈட்டிய பெருந்தொகை இசை ஆய்வினை மேற்கொள்ளுவதற்கும், ஏழு இசை மாநாடுகள் தம் சொந்த செலவில் நடத்துவதற்கும், கருணாமிர்த சாகரம் நூல் அச்சிட்டு வெளியிடுவதற்கும் அவருக்கு உதவின.

**இலக்கியப் பின்புலம்**

நெடும் பல நூற்றாண்டுகள் தமிழ் இலக்கியங்களில் வெளியிடப்பட்டுள்ள இசைப் பகுதிகளைப் பெரும்புலவர்கள் ஆய்ந்தாரில்லை. 2-ம் நூற்றாண்டின் சிலப்பதிகாரமானது இசைத்தமிழ் மற்றும் தமிழிசை என்ற பெருமாளிகைக்கு முதல் தூணாகவும், 6,7,8-ம் நூற்றாண்டுகளின் ஆதித் தமிழிசை மும்மூர்த்திகளின் (அப்பர், சம்பந்தர், சுந்தரர்) இசைப்பாடல்கள் இரண்டாம் தூணாகவும், 15-ம் நூற்றாண்டில் தாளத்தை பிரதானமாக்கிப் பாடிய அருணகிரிநாதர் பாடல்கள் மூன்றாம் தூணாகவும் பின்னர் முத்துத் தாண்டவர் (1560-1640) தோன்றி, இசையைக் கீர்த்தனை வடிவமாக்கியுள்ளது நான்காவது தூணாகவும் அமைத்து பண்டிதரின் முயற்சியை நிறைவு செய்தன. மேற்கூறிய நான்கு தூண்களும் பண்டிதருக்குப் பின்புலமாக இருப்பினும், கருணாமிர்த சாகரம் நூலில் கூறப்பட்டுள்ள இசைத்தமிழ் பற்றிய செய்திகள் பலவற்றிற்கும் சிலம்பும் அதன் உரைகளுமே அடிப்படை என்பதைப் பண்டிதர் குறிப்பிடுகிறார்.

**இசைப்பாடல் வடிவப் பின்புலம்**

நெடும் பல காலங்களாக வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, பரிபாடல் முதலிய இயற்பா வகைகள் இசைப்பாடல்களாகப் பாடப்பட்டு வந்தன. பின் தேவார காலத்திலும் திருவாசகக் காலத்திலும் கீதங்கள் கோவில்களில் மிகுதியாகப் பாடப்பட்டன. ஏராளமான தேவாரப் பாடல்கள் கீர்த்தனையின் வடிவு கொண்டவை. இன்றுள்ள கீர்த்தனையின் ஆதிமூலர்- முத்துத் தாண்டவர் (1560-1640) தொடங்கி, மாரிமுத்தாப் பிள்ளை (1712-1782), அருணாசலக் கவிராயர் (1711-1779), தெலுங்கிசை மும்மூர்த்திகள் (18-ம் நூற்), வேதநாயகம் பிள்ளை (1826-1889), முத்தையா பாகவதர் (1877-1945) மற்றும் பல சங்கீத வித்வான்களைத் தொடர்ந்து மு.ஆபிரகாம் பண்டிதரும் கீர்த்தனைகள் இயற்றியவர்கள் வரலாற்றில் இடம் பெற்றுள்ளார். கருணாமிர்த சாகரத் திரட்டு என்னும் நூலில் தமிழ்க் கீர்த்தனைகள் இடம் பெறுகின்றன. இங்குக் கீர்த்தனைகள் படைத்த முன்னோர்களின் தாக்கம் பண்டிதரையும் பாதித்துள்ளது என்பதனைக் காணமுடிகிறது.

ஒரு குறிப்பிட்ட இலக்கியம் தோன்றுவதற்குக் குறிப்பிட்ட சில பின்புலங்களே காரணமாகும். கருணாமிர்த சாகரம் உருவாக அரசியல் பின்புலம், சமூகப் பின்புலம், பொருளாதாரப் பின்புலம், இலக்கியப் பின்புலம், இசைப்பாட்டு வடிவப் பின்புலம் முதலான சில பின்புலங்கள் காரணமாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

தமிழிசை இலக்கண நூல் ஒன்று இல்லை என்ற குறைதீர்த்த முதல் நூல் பண்டிதர் எழுதிய **கருணாமிர்த சாகரம்** ஆகும். **'தமிழிசை ஒன்று இருந்தது என்பதை எழுத்து பூர்வமாக நிரூபித்து காட்டியவர் பண்டிதரே'** என்று தமிழிசைப் பேரகராதி எழுதிய நா.மம்மது அவர்கள் குறிப்பிடுகின்றார். இந்நூல் முன்னாள் தமிழக முதல்வர் டாக்டர். கலைஞர் அவர்களால் நாட்டுடைமையாக்கப்பட்ட நூல். பெருங்கடல் போன்ற கருணாமிர்த சாகரம், அள்ள அள்ளக் குறையாத அமுதசுரபி. இந்நூல் பிற்கால இசை ஆய்வாளர்களுக்கு நல்லதொரு வழிகாட்டியாக ஒளியூட்டி வருகிறது. **'தமிழ்நாட்டில் தமிழிசையே பெரிதும் முழங்க வேண்டும்'** எனும் நோக்கில் தொடங்கி, இன்றும் இயங்கி வரும் தமிழிசை இயக்கம், தமிழிசைச் சங்கம் முதலானவற்றிற்கு வடிவு கொடுத்த அண்ணாமலைச் செட்டியாருக்கு அடிகோலியவரும் பண்டிதரே ஆவார். இத்தகைய தமிழிசை மறுமலர்ச்சி இயக்கங்களுக்கு 'கருணாமிர்த சாகரம்' வித்திட்டுள்ளது என்பதை என்றும் நினைத்துப் பெருமிதம் கொள்வோம்.

**துணைநின்றவைகள்**


- சிலப்பதிகாரம் மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்குநல்லாருரையும்- உ.வே. சாமிநாதய்யர். 1985.
- கருணாமிர்த சாகரம் (பகுதி 1-7) - ஆபிரகாம் பண்டிதர்.மு.1917.
- தமிழிசைப் பேரகராதி - மம்மது.நா.2010.
- தமிழகத்தில் சமூக சீர்திருத்தம் இரு நூற்றாண்டு வரலாறு - அருணன். 2013.



**முனைவர். ஆ. ஷைலா ஹெலின்**
**இசைத்தமிழ் ஆய்வாளர்**
**திருவனந்தபுரம், கேரளா**

ஒருங்கிணைந்த சேலம் பகுதிகளில்

# கிறிஸ்தவ மிஷன் இயக்கங்களின் பங்கும் பணிகளும்

- ஒரு வரலாற்றுப் பார்வை பகுதி -1

ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் தென்னிந்தியாவின் முதல் மாவட்டமாகவும், மிகப்பெரிய மாவட்டமாகவும் கி.பி.1792 ல் உருவாக்கப்பட்ட அன்றைய சேலம் மாவட்டம் (Erstwhile Unified Salem District). சேலம், நாமக்கல், தருமபுரி, கிருஷ்ணகிரி, மற்றும் திருப்பத்தூரையும் உள்ளடக்கி இருந்தது. இந்த மிகப் பெரிய நிலப்பகுதியில் பல்வேறு கிறிஸ்தவ மிஷன் அமைப்புகள் தங்கள் ஊழியங்களை தீவிரமாக செய்து கிறிஸ்துவின் திராட்சைத் தோட்டத்தை இந்த நிலப்பரப்பில் ஸ்தாபித்திருந்தனர். மதுரை மிஷன், மைசூர் மிஷன் போன்ற ரோமன் கத்தோலிக்க மிஷன் ஸ்தாபனங்களில் ஊழியம் செய்து வந்த இயேசு சபை (Society of Jesus) குருக்கள் இந்த சேலம் பகுதிகளில் முன்னோடியாக நற்செய்தி அறிவிப்பு, திருச்சபைகளை ஸ்தாபித்தல், மருத்துவ சேவை, கல்வி சேவை, முதலியவற்றை செய்து வந்தனர். இவர்களைத் தொடர்ந்து பிரான்சு நாட்டிலிருந்து வந்து இந்த பகுதிகளில் ஊழியம் செய்து வந்த பாரீஸ் அந்நிய வேத போதக சபையினர் (Mission Estrangers de Paris - M.E.P), லண்டன் மிஷனெரி சங்கம் (London Missionary Society - L.M.S.), லுத்தரன் மிஷன் இயக்கங்கள், போன்றவை இன்றைய சேலம் கிறிஸ்தவத்தின் அன்றைய துவக்கத்திற்கான அமைப்புகள். இந்த மிஷன் அமைப்புகளில் பணிசெய்த ஐரோப்பிய குருமார்களின் அர்ப்பணிப்பும், ஊழிய வாஞ்சையும், நிகரில்லாதது. அவர்கள் விதைத்த விதைகள் இன்று விருட்ஷமாய் வியாபித்து நிற்கின்றன; அதன் நிழலில் இன்று நாம் அமர்ந்து அதன் ரஞ்ஜித பழங்களாகிய பலன்களை அனுபவிக்கிறோம்.

**கி.பி.1623 :**

சேலம் வந்த முதல் கிறிஸ்தவ நற்செய்திப் பணியாளர் சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் தான். சேலம் நகர தெருக்களில் முதன் முதலாக இயேசுவைப் பற்றி துணிவுடன் பிரசங்கித்தார்; இது நடந்தது கி.பி.1623 ஆம் ஆண்டு ஆகமன காலத்தில் - அதாவது வருகையின் காலம் - நவம்பர் மாத இறுதி நாட்களில்! தத்துவ போதகசாமி என தனது பெயரை மாற்றிக் கொண்ட நொபிலி சுவாமியார் தன்னை ரோமாபுரிப் பிராமணன் என்றும் கூறிக்கொண்டார். நான்கு வேதங்களின் முடிவாக ஐந்தாவது வேதமாக உள்ள ஏசுர வேதம் தன்னிடம் இருப்பதாகவும், அதைப் போதிக்கவே நான் வந்தேன் என்றும் அவர் சொன்னார். நொபிலி சுவாமியார் இந்து சந்நியாசிகளைப் போன்ற தோற்றத்துடன் விளங்கினார்.

**மாரமங்கலம் மிஷன்:**

நொபிலி சுவாமியாரின் மறையுரைகளைக் கேட்ட கிழட்டு சிப்பாய் ஒருவரும், சாகும் தறுவாயிலிருந்த ஒரு பண்டாரமும் அவரால் ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்தவர்கள் ஆயினர். இவர்களே சேலத்தின் முதல் கிறிஸ்தவர்கள். 'முத்தி உதயன்' என ஞானஸ்நானப் பெயர் சூட்டப்பட்டவர் சாகுந்தறுவாயிலிருந்தவர் தானோ? அல்லது இவர் வேறா தெரியவில்லை. ஆனால் இந்த முத்தி உதயன் என்பவரின் சீடர்கள் 83 பேர்கள் கிறிஸ்தவ விசுவாசம் ஏற்றனர். மதுரை மிஷனிலிருந்து வந்த இயேசு சபை குருவான நொபிலி சுவாமியார் கிறிஸ்துவின் சுவிசேஷத்தை தமிழகத்தின் தூரப்பகுதிகளான சேலம் பகுதிகளில் அறிவித்து இங்கே முதல் கிறிஸ்தவர்களையும், திருச்சபையையும் - மாரமங்கலம் மிஷனையும் (தற்பொழுது சேலம் மாவட்டத்தில் ஓமலூர் தாலுக்காவில் உள்ள உம்பளிக்கை மாரமங்கலம்), அதன் முதல் கிறிஸ்தவ ஆலயத்தையும் – இது தான் கொங்கு மண்டலத்தின் முதல் ஆலயம் கி.பி.1626ல் ஸ்தாபித்தது என இவை எல்லாம் முன்னோடியான சாதனையே. 1640ஆம் ஆண்டில் ஈரோட்டிலும், சேலத்திலும், சேரிகளில் வாழ்ந்தவர்கள் கிறிஸ்தவம் தழுவினர். 'சேலம் சேரிகளிலுள்ள கிறிஸ்தவர்கள்' என்று இவர்கள் மிஷனெரிமார்களின் கடிதங்களில் குறிப்பிடப்படுகிறார்கள்.

**கொங்குப் பட்டி :**

சேலம் மாவட்டம் இடைப்பாடிக்கு மூன்று மைல் தொலைவில் உள்ள கொங்குப் பட்டியில் கி.பி.1660 களில் சங்கை அல்வாரஸ் சுவாமியார் ஒரு கிறிஸ்தவ குடியிருப்பை உருவாக்கினார். அங்கே கர்த்தரின் பாடுகளும், மரணமும் நடித்து காண்பிக்கப்பட்டு இதன் மூலமாக கர்த்தரின் சுவிசேஷம் அறிவிக்கப்பட்டது. 1664ஆம் ஆண்டு சங்கை அல்வாரஸ் சுவாமியார் பூதப்பாடி அருகில் சிங்கம் பேட்டையில் மரித்தார். இந்த காலத்தில் இலுப்பிலி, அணைக்கரைப் பாளையம், ஓமலூர், சங்ககிரி, துருகம், சேலம், ஆகிய ஊர்களில் கிறிஸ்தவர்கள் இருந்தனர்.

**இடைப்பாடி வெள்ளாண்டி வலசு :**

கி.பி.1676ல் மைசூர் மிஷனைச் சேர்ந்த சங்கை



வின்சென்ட் தூ ஆர்த்தே சுவாமியார் கொங்குப் பட்டி சுகக்கேடான இடமாக இருந்ததால் அங்கிருந்து அணைக்கரைப் பாளையம் என்ற இடத்திற்கு தன் கிறிஸ்துவ மக்களோடு குடியேறினார். இங்கு அவர் ஒரு பெரிய கோவிலை கட்டி அதை புனித சிலுவை நாயகி ஆலயம் என்று பெயரிட்டார், மேலும் ஒரு அறை வீடும் கட்டினார். இந்த இடத்திற்கு இடப்பேரி என்றும் பெயர் உண்டு. ஐரோப்பிய குருமார்கள் தொடர்ந்து இந்த இடத்தில் தங்கியிருந்ததால் இந்த ஊர் வெள்ளாண்டி வலசு (வெள்ளை+ஆண்டி+வலசை) என பேர் பெற்றது. இப்படியாக முக்கியத்துவம் பெற்ற இந்த ஸ்தலம் சேலம் பகுதிகளின் தலைமையிடமாக விளங்கியது. இங்கே சங்கை புரூஎன்சா சுவாமியார் கி.பி.1655ல் கட்டியது முதல் கோயில்.

**நாமக்கல் மாவட்டம் இராசிபுரம் அடுத்த காக்காவேரி தேவாலயம் :**

கி.பி. 1686-87 ஆண்டு காலகட்டத்தில் இந்த பகுதியில் கிறிஸ்தவர்கள் குடியேறி வாழ்ந்தனர். சங்கை மனுவேல் டிசூசா சுவாமியார் இங்கே ஒரு கோவிலைக் கட்டினார். சங்கை அப்பே தூபுவா சுவாமியார் (Rev.Fr.Abbe Dubois,M.E.P.,) இவர் பாண்டிச்சேரி மிஷனைச் சேர்ந்த பிரெஞ்சு பாதிரியார். பாரீஸ் அந்நிய வேத போதக சபையைச் சேர்ந்த இவர் கி.பி.1792ல் காக்காவேரியில் ஒரு தேவாலயமும், வழிப்போக்கர்கள் தங்கிச் செல்ல ஒரு சத்திரமும் கட்டினார். அதே போல இடைப்பாடியிலும், தருமபுரியிலும் யாத்ரீகர்கள் தங்கிச் செல்ல தங்கல் மனைகளைக் கட்டித் தந்தார்.

**தருமபுரியில் கோவிலூர் தேவாலயம் :**

1700-1702 ஆகிய ஆண்டு காலகட்டங்களில் மைசூர் மிஷன் சிரேஷ்டர் சங்கை பிரான்சிஸ்கோ தோஸ்ரேஸ் சுவாமியார் தருமபுரியில் படையெடுப்புகளில் பாதிப்படையாத பாதுகாப்பான இடமான வெள்ளை கவுண்டன்பட்டி என்ற கிராமத்தைத் தெரிந்து கொண்டார். அதிலிருந்து அந்த இடம் கோவிலூர் என அழைக்கப்பட்டது. அங்கே ஒரு கோவிலும், குருமனையும் கட்டப்பட்டது. தற்பொழுது புதிய ஆலயம் இருக்கும் இடத்திற்கு அரை மைல் தூரத்தில்தான் தோஸ்ரோஸ் சுவாமியார் கட்டிய பழைய கோவிலும் வீடும் இருந்தது.

**சேலம் மண்ணின் முதல் இரத்தசாட்சி :**

மைசூர் மிஷனைச் சேர்ந்த சங்கை இம்மானுவேல் டீ குன்ஹா சுவாமியார் தான் சேலம் மண்ணில் கிறிஸ்துவிற்காக இரத்தம் சிந்தி மரித்த முதல் இரத்த சாட்சி. கிருஷ்ணகிரி மாவட்டத்திலுள்ள கெலமங்கலம் ஊருக்கு வடக்கே முக்கால் மைல் தூரத்தில் உள்ள கப்பிகனாத்தி ஊரின் தேவாலயத்தில் குருவானவராக இருந்தவர் இவர். ஊருக்கு வெளியே புதிய தேவாலயத்தில் கி.பி.1711 ஆம் ஆண்டு மே மாதம் 9 ஆம் நாள் ஆராதனையை (Ascension Day Service) இவர் நடத்திக் கொண்டிருந்தபோது எதிரிகள் தேவாலயத்தில் புகுந்து பலிபீடத்தில் இவரை தடிகளால் பயங்கரமாக தாக்கியதில் உண்டான காயங்களால் பலநாட்கள் அவதியுற்று மரித்தவர் இவர்.

**பெரு சோதனைக் காலம் -1750-1792 :**

மைசூர் சாம்ராஜ்ஜியத்திற்கு உட்பட்ட சேலம் மாவட்ட பகுதிகள் மைசூர் போர்களினால் நாடு முழுவதும் இராணுவ ஆட்சி இருந்தது. கிறிஸ்தவர்களில் அநேகர் சிப்பாய்களாக இராணுவத்தில் சேர்ந்தனர். திப்பு சுல்தானால் ஏற்பட்ட வேதகலாபனையில் கிறிஸ்தவர்கள் துன்புறுத்தப்பட்டனர். மூன்றாம் மைசூர் போர் முடிவடைந்த போது சேலம் மாவட்டம் முழுவது ஆங்கிலேயர் வசம் வந்தது.

**சேலம் பகுதிகளை விசாரித்த முதல் கத்தோலிக்க பேராயர்:**

கர்நாடக மிஷன் மற்றும் மைசூர் மிஷன்களுக்கு தலைவரான பேராயர் நிக்கோலாஸ் ஷம்பனூவா சேலம் பகுதி கிறிஸ்தவர்களை மேற்பார்வையிட்டு விசாரிக்க கி.பி. 1794 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் சங்கை மோத்தே சுவாமியார், மற்றும் சங்கை தூபுவா சுவாமியார் ஆகியோருடன் வந்தார். பேராயர் பல்லக்கிலும், மற்ற இரு குருமார்கள் குதிரை மீதுமாக வேலூர், கிருஷ்ணகிரி, கோவிலூர், சங்ககிரி துருகம், சேலம், காக்காவேரி போன்ற இடங்களுக்கு பயணம் செய்து சபைகளை சந்தித்து விசாரித்தனர்.

**கல்வி மற்றும் மருத்துவ பணிகளில் மிஷன் இயக்கங்கள் :**

ரோமன் கத்தோலிக்க மிஷனெரிகள் குறிப்பாக மைசூர் மிஷனைச் சேர்ந்த இயேசு சபை குருக்கள், பாரீஸ் அந்நிய வேத போதக சபையைச் சேர்ந்த குருமார்கள் இவர்கள் தங்கள் பகுதிகளில் தரும உதவிகளைத் தாண்டி, கல்வி மற்றும் மருத்துவ பணிகளையும் செய்து வந்தனர்; தங்களுக்கு உதவியாக உள்ளூர் வாசிகளை உபதேசியார்களாக, ஆலய பணிகளில் உதவியாளர்களாக நியமித்திருந்தார்கள். ஆலயமே ஆராதனை நேரங்கள் போக மற்ற நேரங்களில் கல்விச் சாலைகளாக, மருந்தகங்களாக குருமார்களால் பயன்படுத்தப்பட்டது. விசுவாசிகளின் குழந்தைகளுக்கு வேத பாடமும், மொழிப்பாடங்களும் கற்றுத்தரப்பட்டது. குருமார்களும், உபதேசியார்களும், மற்றும் ஆலய உதவியாளர்களும் இணைந்து மருத்துவ உதவிகளையும் அனைவருக்கும் அளித்தனர். குருமார்கள் தாங்கள் பயணிக்கும் போது கூட வழிகளில் மக்களுக்கு மருத்துவம் பார்க்க தங்கள் கூடைகளில் (அந்த காலத்தில் துணிமணிகளை வைக்கவும், மற்ற பொருட்களை எடுத்துச் செல்லவும் மூங்கில் கூடைகள் தான் பயன்பட்டன) எப்பொழுதும் மருத்துவத்திற்கு உதவும் வேர்கள், மற்றும் மூலிகைப் பொடிகளை, வைத்திருப்பது வழக்கம். உயர்குலத்தவர்களின் பிள்ளைகள் திண்ணைப் பள்ளிகளில் படிக்க, அனைவருக்குமான கல்வி கிறிஸ்தவ ஆலயங்களில் மிஷனெரிமார்களாலும், உபதேசியார்களாலும் கற்றுத்தரப்பட்டது.

சங்கை. அப்பே தூபுவா சுவாமியார் (Rev.Fr.Abbe Dubois,M.E.P.) வருடம் முழுவதும் பிரயாணம் செய்து கொண்டேயிருப்பார். ஆங்கிலேயர்களின் இராணுவத்தில் அதிக கிறிஸ்தவர்கள் இருந்தினால் அவர்களை தன்



பயணங்களிலெல்லாம் சந்தித்து நலம் விசாரித்து, அவர்களுக்காக இராணுவ முகாம்களில் தேவாராதனைகளை நடத்துவார். இதனால் ஆங்கிலேய அதிகாரிகளின் நட்பைப் பெற்று, அவர்களிடமிருந்து அநேக உதவிகளையும், சலுகைகளையும் பெற்றார். அதனால் சங்ககிரி துருகம் பகுதிகளில் மக்களுக்கும் அம்மை குத்தும் முறையை ஆரம்பித்து புரட்சிகரமாக முதல் முறையாக மருத்துவ முகாம்களையும், வீடுதேடி மருந்தளிக்கும் முறைகளையும் நடத்தினார்.

**சேலம் பகுதிகளில் ஆங்கிலேயர் ஆட்சி- எதிர்பார்ப்பும் ஏமாற்றமும் :**

கி.பி.1792ல் ஒருங்கிணைந்த சேலம் பகுதிகள் முழுவதுமாக ஆங்கிலேயர் வசம் வந்தது. கிறிஸ்தவ மிஷன் நிர்வாகிகளும், மிஷனெரிமார்களும் நமக்கு சாதகமான கிறிஸ்தவ ஆட்சி இந்த பகுதிகளில் வந்தது என்று மகிழ்ந்திருந்தனர். ஆனால் அவர்களின் எதிர்பார்ப்புகளுக்கு முற்றிலும் எதிராகவே நிலைமைகள் உருவானது. கிறிஸ்தவ மிஷனெரிகளின் மறை பரப்பு பணிகள், கிறிஸ்தவ மிஷன்களின் பங்கு ஆகியவற்றை ஆங்கில அரசாங்கமான கும்பினியர் ஆட்சி விரும்பவில்லை. கிறிஸ்தவ மறைபரப்புப் பணிகள், மிஷனெரிகளின் ஊழியம் ஆகியவை ஆங்கிலேயர் நிவாகத்திற்கு இடைஞ்சலை ஏற்படுத்தும் என்றே நினைத்தனர். அரசு நிர்வாகத்திற்கும், ஆங்கிலேயர்களின் வியாபார முயற்சிகளுக்கும், கிறிஸ்தவ மிஷன் ஊழியங்கள் ஒரு தடையாக அமைந்துவிடக்கூடாது என்றும் பயந்தனர். மேலும், இந்துக்களின் வெறுப்பையும், விரோதத்தையும் அவர்கள் விரும்பவில்லை. தங்கள் சுயநல வாழ்விற்கும், கேளிக்கை களியாட்டங்களுக்கும், மிஷனெரிகளின் கண்டிப்பை அவர்கள் விரும்பவில்லை.

கம்பெனி நிர்வாகம் வியாபார வர்த்தகங்களைப் பெருக்குவதிலும், ஆட்சி அதிகாரத்தை நிலைநிறுத்துவதிலும், இராஜாங்கத்தை விஸ்தரிப்பதிலுமே கருத்தாய் இருந்தனர். இந்தியர்களுக்கு கிறிஸ்தவ நற்செய்தியை அறிவிக்க முயற்சியோ, நற்செய்தி அறிவிக்கும் மிஷன் அமைப்புகளுக்கு அனுமதியோ, உதவிகளையோ கம்பெனி நிர்வாகம் அளிக்கவில்லை. மாறாக இந்தியர்களுக்கு கிறிஸ்தவ நற்செய்தியை அறிவிக்க முற்பட்ட மிஷன் ஸ்தாபனங்களைத் தடுத்தும், ஊழியங்களை தடை செய்தும், மிஷனெரிகளுக்கு அனுமதி மறுத்தும் வந்தனர். கிறிஸ்தவ மார்க்கத்தை அநுசரிப்பதும், பிரச்சாரம் செய்வதும், கம்பெனியின் லாபத்திற்கும், கம்பெனி அரசாங்கத்தின் சமாதானத்திற்கும், இடையூறுகள் ஏற்படுத்தும் என்று கிழக்கிந்திய கம்பெனி நிர்வாகிகள் கருதினார்கள்.

இந்த நிலையில் இந்து சமய பண்டிகைகளுக்கு உதவியும், கம்பெனி கலெக்டர்கள் பண்டிகைகளில் கலந்து கொள்வதும் கொள்கைகளாக செயல்படுத்தப்பட்டது. பாதிரிமார்கள் சந்தை கூடுமிடங்களிலும், விழாக்காலங்களிலும், இந்துக் கோவில் முகப்பில் சுவிசேஷ விளக்கம் செய்வதை ஆங்கிலேய ஆட்சியாளர்கள் வெறுத்தனர். பஞ்ச காலத்தில் மழை வேண்டி வருண ஜெபம் செய்ய பூசாரிகளுக்கு அரசாங்கத்திலிருந்து பணம் வழங்க வேண்டும் என்ற உத்தரவை சேலம் கலெக்டர் கேத்கார்ட் எதிர்த்தார். கிழக்கிந்திய கம்பெனியாரின் இத்தகைய நடவடிக்கைகளைப் பற்றி இங்கிலாந்து பாராளுமன்றத்தில் பெருத்த வாக்குவாதங்கள் நடந்தது. இந்த கால கட்டத்தை 'ஆங்கிலேயர் ஆட்சி - மிஷனெரிமார்களின் மௌனம்



-1799-1830' என்ற தலைப்பில் சேலம் மேற்றிராசன சரித்திர சுருக்கத்தில் அதன் ஆக்கியோன் சங்கை M.S.ஜோசப் அடிகள் குறிப்பிடுகிறார்.

பிரிட்டீஷ் பாராளுமன்றத்தில் திரு.வில்பர் போர்ஸ் மற்றும் லாட் சார்லஸ் கிராண்ட் போன்றோர் 1793 ஆம் ஆண்டிலிருந்து 1813 ஆம் ஆண்டு வரை இந்தியாவில் இந்தியர்களுக்கு கிறிஸ்தவ நற்செய்தியை அளிக்க இங்கிலாந்திலுள்ள மிஷன் ஸ்தாபனங்களையும், அவர் தம் மிஷனெரிகளையும், மற்ற ஐரோப்பிய புரோட்டஸ்டான்ட் மிஷன் ஸ்தாபனங்களையும், அனுமதிக்க கோரி தொடர்ந்து போராடி வந்தனர். இதன் பயனாக கி.பி.1813 ஆம் ஆண்டு பிரிட்டீஷ் பாராளுமன்றத்தில் இதற்கான அனுமதிகள் அளிக்கப்பட்டு உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டது. **'ஆசியாவில் முன் ஒருக்காலும் கட்டப்படாத பிரம்மாண்டமான கட்டிடத்திற்கு நாம் இப்படியாக அஸ்திவாரம் போட்டிருக்கிறோம்'** என்று இந்த மகத்தான வெற்றியைப் பற்றி திரு.வில்பர் போர்ஸ் குறிப்பிட்டது இங்கு நினைவுகூரத்தக்கது. இப்படியாக, இந்தியாவில் நற்செய்திக்கான வாசல் விரிவாய் திறக்கப்பட்டது. படிப்படியாக இந்தியாவின் ஒவ்வொரு நகரத்திற்கும் மிஷன் ஸ்தாபனங்களின் மையம் துவங்கியது. நமது சேலம் பகுதிகளுக்கான லண்டன் மிஷனெரி சங்கத்தின் மையம் சேலத்தில் கி.பி.1827 அக்டோபர் 17ஆம் நாள் சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் மற்றும் அவரது மனைவி திருமதி.எலிசா ஸ்டெப்பி ஆகியோரின் வருகையால் துவக்கம் கண்டது.

**தொடரும் ..**

J **பர்னபாஸ்**

**சேலம் வரலாற்றுச் சங்கம்**

கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் மாத இதழை தமிழ் வரலாற்று அறிஞர்களை சந்தித்து கொடுத்த பொழுது எடுத்த படங்கள்


சேலம் மருத்துவர் டாக்டர் கிருபா அவர்களுடன்


திரு.நவநீதர் அண்ணன் அவர்களுடன்


அருள்திரு செல்வநாதன் ஐயா அவர்களுடன்


CCRD பாண்டிதுரை ஐயா அவர்களுடன்


ரோடா அலெக்ஸ் அக்கா அவர்களுடன்


அருள்திரு சுந்தர்சிங் ஐயா அவர்களுடன்


திரு டேவிட் மனோகரன் அண்ணன் அவர்களுடன்


எழுத்தாளர் முத்தாலங்குறிச்சி காமராசு அண்ணன் அவர்களுடன்



திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் சார்பாக வெளியிடப்படும் மாத ஆய்விதழ். தொடர்புக்கு +91 91767 80001